
திருநெல்லை
ஆன்மீகத் திங்களிதழ்
சுபகிருது – ஆனி
2022 – ஜூன்
21.04.2022 அன்று நடைபெற்ற திருக்களர் குடமுழுக்கு விழா

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

சுபகிருது – ஆனி

2022 – ஜூன் இதழ் – 120

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G. ஜவஹர் தெரு. நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

### பொருளடக்கம்



தனி இதழ் ô 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்




# இறை வணக்கம்

உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவன்
நிலவுலாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சிலம்படி வாழ்த்தி வணங்குவோம்.

– *பெரியபுராணம்*

# ஆசியுரை

### சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்

14.5.2022 அன்று நம்முடைய கிளைமடமான கோ.ஆ.பொ. மடாலயம் புறவாச்சேரியில் நம் கல்வி நிறுவனங்களின் தற்போதைய நிலைபற்றிச் சிந்திக்கவும் கலந்தாலோசிக்கவும் முடிவுகள் எடுக்கவும் கூட்டம் நடைபெற்றது. அந்தக் கூட்டத்தில் நம்முடைய உடற்கல்வியியல் கல்லூரி முதல்வர் டாக்டர் திரு.ரவீந்திரன் அவர்கள், பாலிடெக்னிக் முதல்வர் டாக்டர் திரு.மாயாண்டி அவர்கள், கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக் மேல்நிலைப்பள்ளி முதல்வர் திருமதி. மணிமொழி மோகன் அவர்கள், மழலையர் மற்றும் தொடக்கப்பள்ளித் தலைமையாசிரியை திருமதி. மணிமொழி முருகன் அவர்கள், திருக்களர் ஆண்டவர் மழலையர் பள்ளித் தாளாளர் திரு. ராமலிங்கம் மற்றும் மேலாளர் திருமதி. விஜயலெட்சுமி மற்றும் தலைமை ஆசிரியர், ஆசிரியப் பெருமக்கள், சிதம்பரம் அக்ஷரா மாண்டிஸோரிப் பள்ளித் தாளாளர் திரு. ராமநாதன், திருமதி நாகம்மை, தலைமை ஆசிரியைகள், புறவாச்சேரி நாச்சியப்ப சுவாமிகள் மாண்டிஸோரிப் பள்ளித் தாளாளர் திரு. முருகப்பன் மற்றும் திருமதி லெட்சுமி முருகப்பன் மற்றும் தலைமை ஆசிரியை, ஆசிரியைகள் அனைவரும் கலந்து கொண்டு அவர்கள் தங்களது அபிப்ராயங்களை வெளிப்படுத்தினார்கள். இன்றைய சூழ்நிலையில் மாணவர்கள் சேர்க்கை மிகவும் பாதிக்கப்பட்டுள்ளது. பள்ளிக் கட்டணங்கள் சரியாகக் கட்டப்படவில்லை. எனவே பொருளாதார ரீதியாக மிகவும் சிரமமாக உள்ளது. இதை எதிர் கொள்வது எப்படி என்று கலந்தாலோசித்து எடுக்கப்பட்ட முடிவுகள் :

1. எல்லாக் கல்வி நிறுவனங்களும் போதுமான மாணவர்களைச் சேர்ப்பதற்கு விளம்பரம், நேரடித் தொடர்பு முதலியவைகள் மேற்கொள்ள வேண்டும்.

2. கல்லூரிகள் மேல் நிலைப்பள்ளிகளில் நான்கில் ஒரு பகுதி குறைந்தபட்சம் 20% மாணவர்கள் சேர்க்கை அதிகப்படுத்தப்பட வேண்டும்.

3. தொடக்கப்பள்ளிகளைப் பொறுத்த மட்டும் குறைந்தபட்சம் ஆசிரியர்கள் டிரைவர்கள் சம்பளத்திற்கேற்ப உரிய தொகை வருமானம் வருமளவு மாணவர்கள் சேர்க்கை நடைபெற வேண்டும்.

4. இரண்டு ஆண்டுகளுக்கு, கட்டிடங்களையோ, ஆசிரியர்கள் எண்ணிக்கையையோ முடிந்தவரையில் அதிகப்படுத்தக் கூடாது. தொடக்கப்பள்ளி குறைந்தபட்சம் 150 மாணவர்களைச் சேர்க்க வேண்டும். இல்லையெனில் பள்ளிகளை மூடுவதற்குச் சிந்திக்கப்படும்.

5. நம்மிடமுள்ள கட்டிட அமைப்பு மூலம் கீழ்க்கண்ட கல்வித் துறைகளைச் சார்ந்த சேவையை நடத்தலாம்.

a) C.A தேர்விற்குப் பயிற்சி அளிப்பது (CA Entrance, Intermediate and Final)

b) உடற்கல்வியியல் கல்லூரியில் யோகா வகுப்புகளைப் பகுதி நேரச் சேவையாகச் செய்வது.

c) நாச்சியப்ப சுவாமிகள் பாலிடெக்னிக் கல்லூரியில் குறைந்த காலப் பயிற்சியாக Masantry, Fitter, Lathe Operation, CNC Machine Operator போன்ற வகுப்புகளைத் தொடங்குதல்.

d) தமிழ்நாடு பப்ளிக் சர்வீஸ் கமிஷன் பயிற்சி வகுப்புக்களை (Group 1, 2, 3, 4) நடத்துவது.

e) சிதம்பரத்தில் தொடக்கப்பள்ளி ஆரம்பிப்பது பற்றிச் சிந்திப்பது.

f) சூலை முதல் Montessori Teacher's Training வகுப்புகளை இணைய வழியில் நடத்துவது அதற்குத் திருமதி. சித்ரா சிவராமனைப் பொறுப்பேற்றுக் கொள்ள வைப்பது.

g) IAS பயிற்சி வகுப்புகளை இணையவழியில் நடத்த முடியுமா? என்று சிந்திப்பது. கட்டிடத்துறை, இரும்புத் தொழிற்சாலை Lathe Operation ஆகியவற்றில் சேரத் தகுதிக் கல்வி போதிப்பது (3 மாத கால நிர்ணயம்)

h) Skill Development பயிற்சிகள் நடத்துவதற்கு முயற்சி செய்வது. மேற்கண்ட முடிவுகள் எடுக்கப்பட்டு அறிவிக்கப்பட்டது.

துரதிர்ஷ்டவசமாக புறவாச்சேரி நாச்சியப்பர் மாண்டிஸோரிப் பள்ளி நான்கு குழந்தைகளுக்கு மேல் சேராத காரணத்தால் ஜூன் மாதத்திலிருந்து மூடப்பட்டது.

"உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பல கற்றும்
கல்லார் அறிவிலா தார்"

என்கிற குறளுக்கிணங்க நாமும் உணர்வு பூர்வமாகச் செயல்படுவதைத் தவிர்த்து அறிவுபூர்வமாகச் செயல்படுவது பொருளாதார ரீதியாக நலம் பயக்கும் என்று நம்புகிறோம்.

அண்மைக் காலத்தில் நம்முடைய பள்ளிகளில் மாணவர்களுக்குக் கல்வி கட்டணம் கட்டுவது குறைந்து கொண்டே வருகிறது. கொரானாவையும், இணையவழிக் கல்வியையும் காரணம் காட்டித் தங்கள் பிள்ளைகள் பள்ளிக்கு வரவே இல்லை; நாங்கள் ஏன் பணம் கட்ட வேண்டும் என்ற ரீதியில் பெற்றோர்கள் நியாயமற்ற முறையில் நடந்து கொள்கிறார்கள். இந்தச் சூழ்நிலையில் பொருளாதார ரீதியாக இழப்பு ஏற்படும்; கல்வி நிறுவனங்களை நிறுத்துவது நல்லது என்று நம்புகிறோம். மனதிற்கு வருத்தமாக இருந்தாலும் நம்மால் கல்வி நிறுவனங்களை முழுத் தர்மமாக நடத்த இயலவில்லை. இதனைப் புரிந்து கொண்டு பெற்றோர்கள் நடக்க வேண்டுகிறோம். ஆசிரியர்கள் வற்புறுத்திக் கட்டணம் செலுத்தச் செய்ய வேண்டுமென்று விரும்புகிறோம்.

இறைவன் அருளால் நாம் தொடங்கிய எந்தக் கல்வி நிறுவனமும் இனிமேல் மூடப்படக் கூடாது என்று ஆண்டவனைப் பிரார்த்தனை செய்கிறோம்.

***ஸ்ரீ சற்குருநாதன் துணை***



# கம்பராமாயணம் (தொடர்ச்சி)

## (குகன், சுக்கிரீவன், விபீஷணன்)

### (சீர்வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்)

சபரியின் பிறப்பு நீங்குதல் நிகழ்வுடன் ஆரண்ய காண்டம் நிறைவுபெறுகிறது. இதிலே சம்பந்தப்பட்ட பாத்திரங்கள் குகன், மாரீசன், சடாயு, சபரி ஆகியவர்கள் ஆகும்.

மாரீசனுடைய பாத்திரப் படைப்புப் பற்றி ஏற்கனவே எழுதியுள்ளோம். குகன் பாத்திரப் படைப்புப் பற்றியும் ஏற்கனவே குறிப்பிட்டுள்ளோம். ஆயினும் குகன் முக்கிய பாத்திரம் என்பதால் அவனைப் பற்றி மேலும் சில கருத்துக்களைச் சொல்ல வேண்டுமென்று நினைக்கிறேன். ராமனால் வரித்துக்கொள்ளப்பட்டவர்கள் மூன்று தம்பிகள் ஆவார்கள். குகன், சுக்கிரீவன், விபீஷனன் ஆகிய மூவர். மூவரும் குணத்தாலும், திறமையாலும், எண்ணங்களாலும் மிகவும் வேறுபட்டவர்கள். குகன் ஒரு தீவிர பக்தன், எளியவன், இனியவன். ராமனைத் தெய்வமாகப் போற்றித் தொழுதவன். இவன் மனித ஜாதியில் பக்தி ஒன்றே குறிக்கோள் என்று நம்புகிற மிகச் சாதாரண மனிதன். ஆயிரம் படகுகளுக்குச் சொந்தக்காரன்; படகு இனத் தலைவன்.

**சுக்கிரீவன் :**

இவன் குற்றங் குறைகள் உடைய சாதாரண மனிதன். ராமனிடம் நட்புப் பூண்டு தன் அண்ணன் வாலியை ராமன் மூலம் மோட்சம் அடையச் செய்த குரங்கினத் தலைவன் ஆனவன். காரியவாதி. வாலி மோட்சம் பெறும் வரையில் ராமனோடு மிகுந்த அன்பும், நட்பும் கொண்டவன். ஆனால் ராமனுடைய உதவியால் வாலி மறைந்த பின்னர் அவனுடைய வாழ்க்கை முறை முற்றிலும் மாறிவிட்டது. ராமனை மறந்து கள்ளிலும், களியாட்டத்திலும் ஈடு பட்டவன். அண்ணன் மனைவி தாரையைக் களவாட நினைத்தவன். தன் காரியம் நிறைவேறியவுடன் நட்பை மறந்தவன். ஆனால் ராம இலக்குவன் ஆகியவர்களின் அறிவுரைகளைக் கேட்டுத் தெளிவு பெற்றவன். ராம ராவண யுத்தத்தில் பெரும் பங்கு வகித்தவன். இவனுடைய குரங்கினப் படைதான் ராமனுடைய பெரும் படையின் பெரும் பகுதியாக இருந்தது. இந்தக் காரணத்தைக் கொண்டு ராமனால் தம்பியாக வரிக்கப்பட்டவன்.

**விபீஷணன் :**

வேதாந்தி; மற்றவர் குணங்களைத் தெரிந்து கொள்ளும் திறமையுடையவன். ஆனால் இவனும் காரியவாதிதான். இலங்காபுரி இராஜ்யத்தை அடைவதற்காகவே ராமனை அண்டி வந்தவன். ஆனால் அண்ணனுடைய தீய நடவடிக்கையைப் பொறுத்துக் கொள்ளமுடியாமல் விட்டுப் பிரிந்து ராமனைச் சேர்ந்தவன். ராமனுக்கு அரக்கர் படைப் போர் முறைகள், சூட்சுமங்கள் அனைத்தும் ராம, லெட்சுமணன் இருவருக்கும் கூறிப் போரில் வெற்றி பெற உதவியவன். காரியவாதி என்றாலும் நேர்மைக் குணமும் நியாயச் சிந்தனையும் கொண்டிருந்தபடியால் ராமனால் நண்பனாக வரிக்கப்பட்டவன். இவர்கள் இருவரும் நட்பை, அன்பைச் சாதனையாகக் கொள்ளாமல் சாத்தியமாகக் கொண்டவர்கள். குகன் ஒருவனே அன்பே சிவம் என்ற கருத்துடைய தன்னலமில்லாத தீவிர பக்தன்.

**குகன் பெருமை :**

ராமன் கங்கைக்கரைக்கு வந்திருக்கிறார் என்று அறிந்ததும் தரிசனம் செய்ய விரும்பி ஓடோடி வந்தவன். தேனும், மீனும் பிரசாதமாகப் படைத்தவன். துறவு பூண்டு வந்துள்ள ராமர் துறவியர் நெறிமுறைப்படி மீன் உண்ணமாட்டார் என்பதே தெரியாமல் மீனையும் தேனையும் படைத்த தீவிர பக்தன். அதனை, புன்சிரிப்போடு உண்டேன். மகிழ்வாயாக என்று சொல்லிப் பெற்றுக் கொண்டார் ராமர். குகன் அக்கணமே ராம பக்தனானவன்.

***....... எல்லை நீத்த***
***அருத்தியன், "தேனும் மீனும் அமுதினுக்கு அமைவது ஆகத்***
***திருத்தினென் கொணர்ந்தேன்; என்கொல் திரு உளம் ?***
***என்ன, வீரன்***
***விருத்த மாதவரை நோக்கி முறுவலன், விளம்பலுற்றான்.***

அரசகுலத்தைச் சேர்ந்த ராமர் லெட்சுமணன் காட்டிற்கு வரவேண்டிய தேவை என்ன என்பதைக் கேட்டுத் தெரிந்து கொண்டு பக்தியால் ஆத்திரப்பட்டவன்.

அதே போலச் சேனைகளோடு பரதன் காட்டிற்கு வருகிறார் என்று கேள்விப்பட்டதும் இலக்குவனைப் போல் பொறுக்க முடியாத சினத்தோடு

கொதித்து எழுந்தவன். தன்னாலே பரதனைத் தோற்கடிக்க முடியும். முடியாவிட்டால் தான் உயிரோடு இருந்து என்ன பயன் என்று கொதித்தெழுந்தவன்.

*ஆழ நெடுந்திரை ஆறு கடந்து இவர்போவாரோ ?*
*வேழ நெடும் படை கண்டு விலங்கிடும் வில்லாளோ ?*
*"தோழமை" என்று , அவர் சொல்லிய சொல் ஒரு சொல் அன்றோ*
*"ஏழைமை வேடன் இறந்திலன்" என்று எனை ஏசாரோ ?*

*"ஆடு கொடிப்படை சாடி, அறத்தவரே ஆள*
*வேடு கொடுத்தது, பார்" எனும் இப்புகழ் மேவீரோ ?*
*நாடு கொடுத்த என்நாயகனுக்கு இவர், நாம் ஆளும்*
*காடு கொடுக்கிலர் ஆகி, எடுத்தது காணீரோ?*

என்று முழக்கமிடுகிறான் குகன்.

ஆனால் பரதனை நெருங்கிச் சென்று அவனுடைய தவக்கோலத்தையும், சோகம் கொண்ட முகத்தையும் கண்டு எண்ணத்தை மாற்றிக் கொண்டு பரதனைத் தொழுதவாறு "ஆயிரம் ராமர் நின்கேழ் ஆவரோ" என்று மனம் திறந்து புகழ்ந்தவன்.

ஆரண்ய காண்டத்தில் கங்கையைக் கடந்து அக்கரை கொண்டு சேர்த்தவன். தவமுனிவர் அகத்தியர் ஆசிரமத்திற்குக் கொண்டு சேர்த்தவன். இப்படி, பல்வகையிலும் தன்னுடைய பக்தியை எந்தவிதமான உள்நோக்கமும், சுயநலமுமில்லாமல் தெளிந்த உத்தம தீவிர பக்தனாகக் கம்பர் குகன் பாத்திரத்தை வரைந்திருப்பது கம்பன் அன்பர்கள் அனைவருக்கும் மகிழ்ச்சி தரக்கூடிய செய்தியாகும்.

*(தொடரும்...)*



## ஓம் நமோ நாராயணாய! 108 திவ்யதேசங்கள்

### 19. திருநாகை என்ற நாகைப்பட்டினம்

(அழ.மெய்யம்மை)

(காப்பியக் கவிஞர் நா.மீனவன் அவர்களின் பேத்தி)

108 திவ்ய தேசங்களுள் பத்தொன்பதாவது திவ்ய தேசம், திருநாகை என்ற நாகைப்பட்டினம், சோழ நாட்டுத் திருப்பதிகளுள், இது பத்தொன்பதாவது திருத்தலமாகும். இந்த நாகைப்பட்டினம் ஓர் அழகிய கடற்கரை நகரமாகும். மயிலாடுதுறையிலிருந்து நாகைப்பட்டினம் செல்லும் பேருந்துகள் இக்கோவிலின் அருகாமையில் உள்ள நிறுத்தத்தில் நிற்கின்றன.

இத்தலம் சௌந்தர்ய ஆரண்யம் எனப்படும் சுந்தர ஆரண்யத்தில் அமைந்துள்ளது.

இத்தலம் கிரேதாயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் என நான்கு யுகங்களிலும் பெருமை பெற்றுத் திகழ்ந்த தலமாகும்.

கிரேதாயுகத்தில், இத்தலத்தில் உள்ள ஸாரபுஷ்கரணி அருகாமையில், நாகங்களின் தலைவனான ஆதிசேஷன், எம்பெருமானைக் குறித்துத் தவமிருந்தார். ஆதிசேஷனுக்கு எம்பெருமான் காட்சி கொடுத்து, ஆதிசேஷனை எப்போதும் தான் சயனமாக ஏற்றுக் கொள்வதாக இத்தலத்தில் தான் அருளினார். ஆதிசேஷன் ஆகம விதிப்படி, அஷ்டாங்க விதான முறையில், பெருமாளை ஆராதித்தார். அவரது பெயரால், இந்நகரம் நாகன்பட்டினமாகி, பின் நாகைப்பட்டினமாயிற்று.

திரேதாயுகத்தில், பூமாதேவி பகவானைக் குறித்து இத்தலத்தில் தவமிருந்தார்.

துவாபரயுகத்தில், மார்க்கண்டேயன் பகவானைக் குறித்து இத்தலத்தில் தவமிருந்தார்.

கலியுகத்தில், சாலிசுகன் என்னும் சோழமன்னன், இப்பெருமானை வழிபட்டு வந்தான். வழிபட்ட வனத்தில், சுரங்கம் ஒன்றிருந்தது. அச்சுரங்கத்தின் வழியே மூன்று கொங்கைகளோடு கூடிய ஒரு பெண் வந்து போய்க் கொண்டிருந்தாள். இம்மன்னனின் பார்வை பட்டதும்,

அப்பெண்ணின் ஒரு கொங்கை மறைந்தது. திகைத்து நின்ற அப்பெண், இம்மன்னன் மீது காதல் கொண்டாள். இருவரும் இப்பெருமான் மீது பேரன்பு கொண்டு நித்ய கைங்கர்யம் செய்து, சிறந்த புத்திரப் பேற்றினைப் பெற்று, இப்பெருமானுக்குப் பிரம்மோத்ஸவமும் நடத்தி வைத்தனர்.

இங்குள்ள,

மூலவர் - நீலமேகப்பெருமாள்

உற்சவர் - சௌந்தர்யராஜன்

தாயார் - சௌந்தர்யவல்லி

உற்சவத் தாயார் - கஜலெட்சுமி

தீர்த்தம் - ஸாரபுஷ்கரணி (ஸாரம் என்றால் பாம்பு, பாம்புகளின் தலைவனாகிய நாகராஜனால் உண்டாக்கப்பட்ட தீர்த்தம்)

விமானம் - சௌந்தர்யவிமானம்

கோலம் - கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலம்

நாகப்பட்டின ராஜாவாகிய இந்த சவுந்தர்யராஜப் பெருமாளின் இடையை, தசாவதாரங்களை விளக்கக்கூடிய செப்புத் தகட்டாலான மாலையொன்று அலங்கரிக்கின்றது. மேலும், அவ்விடையை ஒரு சாவிக் கொத்தும் அலங்கரிக்கின்றது. இவர் ராஜா என்பதால், இவரின் காதை ஓர் ஒற்றை நீலக்கல் குண்டலமும் அலங்கரிக்கின்றது. இங்குள்ள அரங்கனின் சன்னதியில், வெண்கலத்தினாலான நரசிம்ம அவதாரத்தினை விளக்கும் சிலை ஒன்று உள்ளது. ஒரு கையால் பிரகலாதனைத் தாங்கி ஆசிர்வாதம் செய்வது போலவும், ஒரு கையை அபய முத்திரையாக வைத்திருப்பது போலவும், மற்ற எல்லாக் கைகளாலும் இரண்யனை வதம் செய்வது போலவும், அஷ்டபுஜ நரசிம்ம சிலையான அச்சிலை அமைந்துள்ளது. இத்தலத்தில் உள்ள ஸாரபுஷ்கரணியில் நீராடினால், நேரே சூர்ய மண்டலத்தை அடையலாம். இங்குள்ள பெருமாளுக்கு மட்டுமல்ல, தாயாருக்கும் கருடவாகனப் புறப்பாடு உண்டு.

என் அய்யா, காப்பியக்கவிஞர், நற்றமிழ் நாவலர் கவிஞர்கோ. நா. மீனவன், "திருநாகை" குறித்து எழுதிய ஐந்து பாடல்கள் இதோ !

1. இங்குள்ள இராஜகோபுரம் 7 நிலைகளைக் கொண்டது.

இக்கோபுரத்தின் மேல் வைக்கப்பட்டுள்ள விளக்கானது, கடலில் வரும் கப்பல்களுக்கு வழிகாட்டும் கலங்கரை விளக்காக இருந்து வந்தது. தற்போது, அந்த எழுநிலைக் கோபுரம் ஒருநிலைக் கோபுரமாகத் தான் உள்ளது. இவ்வாறு கடலில் ஒளிகாட்டும் அற்புதமான திருநாகையில் வாழ்கின்ற நீலமேக வண்ணனை வணங்கிப் போற்றச் சொல்லும் முதல் பாடல்:

*எழுநிலை மாடத்தில் எண்ணெய்விளக் கேற்றிவைத்து*
*வழிகாட்டும் விளக்கமென வங்கங்கள் பயன்பெறவே*
*ஆழ்கடலில் ஒளிகாட்டும் அற்புதஞ்சேர் திருநாகை*
*வாழ்நீல மேகனைநீர் வணங்கிமிகப் போற்றுமினே.*

2. இங்குள்ள பெருமாள் நின்ற, இருந்த, கிடந்த என்ற மூன்று திருக்கோலங்களிலும் சேவை செய்கின்றார். நீலமேகப்பெருமாள் என நின்ற திருக்கோலத்திலும், வீற்றிருந்த பெருமாள் வைகுண்டநாதர் என அமர்ந்த திருக்கோலத்திலும், அரங்கநாதப் பெருமாள் எனப் பள்ளி கொண்ட திருக்கோலத்திலும் காட்சி தருகின்றார். நாகங்களின் தலைவனான நாகராஜனுக்கு மூன்று திருக்கோலங்களில் எம்பெருமான் சேவை சாதித்துள்ளார். இக்கோலங்களை, திருநாகை என்னும் இப்பதியில் கண்டு, இறைவனிடம், அவரது அருளைப் பெற மன்றாடிப் பணியச்சொல்லும் இரண்டாம் பாடல் :

*நின்றும் இருந்தும் நிலையாகத் தான்கிடந்தும்*
*என்றும் அருள்செய்யும் எம்பெருமான் திருக்கோலம்*
*நன்றாய நாகையாம் நற்பதியில் நாம்கண்டு*
*மன்றாடிப் பணிவதற்கு மனங்கொண்டு வந்திடுமின்.*

3. தாயார் சவுந்திரவல்லியுடன் நித்தமும் திருநாகையில் நமக்கு அருளுவதற்காகவே வீற்றிருக்கின்றார் சவுந்திரராஜப் பெருமாள். அவரைப் பக்தியுடன் யார் தொழுகின்றார்களோ, அவர்களின் முன்வினைகள் ஒழிந்துவிடும். ஆதலால், பக்தர்களே! விரைந்துவந்து எம்பெருமானின் பாதமலர்களைத் தொழுதிடுங்கள் என அழைக்கும் மூன்றாம் பாடல் :

*சத்தியநல் தாயார் சவுந்தர வல்லியுடன்*
*நித்தலும் நமக்கருளும் நிமலன் திருநாகை*

*பத்தியால் தொழுவார்தம் பழவினைகள் பட்டொழியும்*
*பத்தரீர் வந்திவன்தன் பாதமலர் தொழுமின்காள்.*

4. கடலலை மேல், பாம்பணையில் துயில்கின்றவனை, சங்கு சக்கரம் கையில் கொண்டவனை, சார்ங்கம் என்னும் வில்லை உடையவனை, ஆறு அங்கங்கள் மற்றும் ஐந்து வேதங்கள், எங்கும் பரவ எழுந்தருளியிருப்பவனை வணங்கச் சொல்லும் நான்காம் பாடல் :

*வங்கக் கடலலைமேல் வரியரவில் துயின்றானைச்*
*சங்கம்கைக் கொண்டானைச் சாரங்க வில்லானை*
*அங்கங்கள் ஆறைந்தாய் அமைந்துள்ள வேதங்கள்*
*எங்கெங்கும் தானுய்ய எழுந்தானை வணங்குமினே.*

5. உத்தானபாத மகாராஜனின் குமாரனான துருவன் என்னும் சிறுவன், இவ்வுலகு முழுவதும் தனக்கே அடிமையாக வேண்டும் என்று திருமாலைக் குறித்துக் கடுந்தவம் செய்து வந்தான். துருவனுக்கு, எம்பெருமான் கருடாழ்வார் மீது பேரழகு பொருந்தியவராகக் காட்சி கொடுத்தார். அப்பேரழகில் மயங்கிய துருவன், தான் கேட்க வந்த வரத்தை மறந்து, இறைவனது இப்பேரழகில் எப்போதும் திளைக்கும் மோட்சம் வேண்டுமென்று வேண்டினான். எம்பெருமான், அவ்விதமே மோட்சமளித்து, அவனுக்குக் காட்சி கொடுத்த சௌந்தர்யமான திருக்கோலத்திலேயே இத்தலத்தில் எழுந்தருளினார்.

இவ்விதம் துருவனுக்கும், திருமங்கையாழ்வாருக்கும், ஆதிசேஷனுக்கும் காட்சி கொடுத்து மகிழ்வித்த எம்பெருமானை, அரவணையைப் படுக்கையாகக் கொண்டவனை, நாகை அழகனை, மனங்குளிரப் பணிந்திடுங்கள் எனக் கூறும் ஐந்தாம் பாடல் :

*துருவம்எனும் தவமுடைய தோன்றலுக்கும் பாசுரஞ்சொல்*
*திருமங்கை மன்னனுக்கும் திகழ்ஆதி சேடனுக்கும்*
*உருக்காட்டி மகிழ்வித்த உயர்அரவப் பாயலினான்*
*அருள்நாகை அழகனைநீர் அகங்குளிரப் பணிந்திடுமின்.*

திருநாகை என்னும் இத்திவ்யதேசத்தை, திருமங்கையாழ்வார் 10 பாசுரங்களால் மங்களாசாசனம் செய்துள்ளார். மூலவர் நீலமேகப்பெருமாள், இங்கு நாகை அழகியார் எனவும்

அழைக்கப்படுகிறார். 10 பாசுரங்களிலும், இப்பெருமானின் பேரழகில் ஈடுபட்ட திருமங்கையாழ்வார், இப்பதிகத்தில் உள்ள பாசுரங்களை, "அச்சோ ஒருவர் அழகியவா" என நிறைவு செய்கின்றார்.

திருத்தோள்களில் வாசனைவீசும் துளவ மாலையும், கைகளில் சுதர்சனமும் பாஞ்சசன்னியமும் தரித்து, எல்லோரும் விரும்பத்தக்க இவர், நம் இல்லத்தில் பிரவேசித்திருக்கிறார். பண்பாளர், இளைஞர். இவரது வாயின் நிறம் செம்பவளம் போலிருக்கிறது. மரியாதைக்குரிய இவரது வடிவமோ தேவ வடிவமாகும். இவரது சொல்லோ, அழகிய பவளக் குவியல் போலுள்ளது. அச்சோ! இவரது அழகை எப்படிப் பாராட்டுவதென்றே தெரியவில்லையே ! என நாகை அழகனின் அழகை வியந்து போற்றும் திருமங்கையாழ்வாரின் மங்களாசாசனப் பாடல் :

***வம்பவிழும் துழாய் மாலை தோள்மேல், கையன ஆழியும் சங்கும் ஏந்தி***
***நம்பர் நம்இல்லம் புகுந்து நின்றார் நாகரிகர் பெரிதும் இளையர்***
***செம்பவளம் இவர் வாயின் வண்ணம்; தேவரிவரது உருவம் சொல்லில்***
***அம்பவளத் திரளேயும் ஒப்பர் அச்சோ ஒருவர் அழகியவா !***

(தொடரும்...)

## சைவநெறியின் பார்வையில் திருநீறு
**(இல.பழனியப்பன்)**

திரு என்பது தமிழிலே மிக மிக உயர்வான பொருள் பொதிந்த சொல். புனிதமான சொல். அந்தத் திரு சேர்ந்த திருநீறே உலகில் மிக உயர்ந்த நிலையான வாழ்வு நெறியாகும்.

திருநீறு சாம்பல் தானே. ஆடி அடங்கும் மனித வாழ்வின் இறுதி நிலை இறப்பே ! அந்தச்சிறப்பான மனித வாழ்வின் முடிவினை மனித குலத்திற்கு நினைவுபடுத்துவது. நாம் மண்ணோடு மண்ணாக ஒரு நாளில் சாம்பல் ஆகி விடுவோம் என்பதாகும். என்றும் நிலையாமையே மனித வாழ்வில் உயரிய நெறி. அந்த நெறியை நினைவுபடுத்தவே நாம் அன்றாடம் நெற்றியில் திருநீறு அணிகிறோம்.

அப்படி அணியும் போது நாம் நம்மையும் அறியாமல் நம்மை நமது

வாழ்வை இறைவனுக்கு வழங்கத் தயாராக இருக்கிறோம் என்பதே உண்மையான பொருளாகும். சைவநெறியைத் தாயாகக் கொண்ட மதங்களாகிய சமயங்கள் இதனை நம்மைப் போல் வலியுறுத்திச் சொல்லாததே இன்றைய மனிதகுல வாழ்வின் போருக்கும், பூசலுக்கும் முக்கிய காரணம் ஆகும்.

"*நீறில்லா நெற்றி பாழ்*"
என்ற சொல் பல பொருளைக் கொண்டுள்ளது.

திருநீறு இல்லாத நெற்றி ஒளியிழந்து களை இழந்து தானே இருக்கிறது ? உடல்நிலை சரியில்லாதவர்களுக்குப் பெரியவர்கள் திருநீறு பூசுவது உடலின் நீர்ச்சத்தையும் காப்பாற்றி, சளியையும் போக்கி மருந்தாகப் பயன்படுத்தும் நோக்கமே முக்கிய காரணமாகும். உடல்நோய் மட்டுமின்றி, உள் நோயையும் குணப்படுத்தும் திருநீறு என்றும் நமக்குப் புனிதமான மருந்தே.

சமயக்குரவரில் ஒருவரான திருஞானசம்பந்த சுவாமிகள் சிவன் வணக்கத்தைத் திருநீற்றுப்பதிகம் மூலமே நமக்கு அறிமுகப்படுத்துகிறார்.

மந்திரமாவது நீறு என்று தொடங்கும் போதே, வானவரை விட மேலானது நீறு என்கிறார். வானவரை விட இந்தத் திருநீறே மேலானது என்கிறார்.

அடுத்த வரியில், சுந்தரமாவது நீறு, துதிக்கப்படுவது நீறு
என்று சொல்வதை ஆழ்ந்து சிந்தித்துப் பார்க்க வேண்டும். சுந்தரம் என்பது பொலிவான அழகைக் குறிக்கிறது. அந்த அழகு ஒன்றே துதிக்கப்பட வேண்டிய ஒன்று என்று நமக்கு ஞானசம்பந்தர் உணர்த்துகிறார்.

வேதத்தின் வடிவமே திருநீறு; அந்தத் திருநீறு மட்டுமே வெந்துயரைப் போக்க வல்லது என்று கூறி முகத்திலிடும் திருநீறை நமக்கு அடையாளம் காட்டுகிறார். முக்தி என்பது எங்கே உள்ளது? எப்படி உள்ளது? என்று ஏன் தேடுகிறீர்கள். அது முனிவர் அணியும் திருநீறில் மட்டுமே இருக்கிறது.

முனிவர் என்பது முற்றும் துறந்து இறை நெறியில் தம்மை அர்ப்பணிப்பவர்களை மட்டுமே குறிக்கிறது. நம்மை உய்விக்க

ஞானிகளும் மகான்களும் துறவினை மேற்கொண்டு தவமிருக்கிறார்கள். அப்படிப் பட்டவர்கள் மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை ஏன் உண் ஆசையைக் கூட விட்டுவிட வேண்டும். ஆனால் அத்தகைய துறவிகள் இன்று கேள்விக் குறியாக இருக்கிறார்கள். மற்றவரை ஆதிக்கம் செய்ய வேண்டும் அடிமைப்படுத்த வேண்டும் என்று புகழை நோக்கிப் பயணம் செய்பவர்கள் எல்லோருக்கும் ஆசை கடந்த நிலையில் இறைபணி செய்யத் திருநீறு மட்டுமே என்றும் உதவ முடியும் என்று ஆணித்தரமாகச் சொல்கிறார் ஞான சம்பந்தர்.

திருநீறைக் காண்பதே ஞான சம்பந்த சுவாமிக்கு இனியதாக இருக்கிறது. இனிமை என்பது உண்ணும் உணவில் மட்டும் இல்லை; அதைவிட அதை நேரில் பார்க்கும் போதே இனிய உணர்வு தரும் திருநீறிலேயே இருக்கிறது என்று சொல்வது உண்மைதானே? உயிர்களின் முழுமுதற் கடவுளான சிவனுடன் தொடர்வு கொள்வதே சைவமாகும். சைவமாகிய சிவச் சின்னங்களாக, திருநீறு, உருத்திராட்சம் ஆகியவை உள்ளன. இவற்றில் திருநீறே எப்பொழுதும் எளிதாகக் கிடைக்கக் கூடியது ஆகும். திருநீறு அணிபவர்களுக்குப் புண்ணியம் தானே தேடி வரும்; அதன் வழி புகழும் கூடி வரும்.

திருநீறு அணிபவர்களுக்குச் செல்வத்தில் நிறைவு கிடைப்பதால் வருத்தங்கள் தானாக ஓடி ஒளியும். துயிலைத் தடுப்பது நீறு என்றால் தேவையற்ற தூக்கத்தைத் தவிர்த்து நம்மைச் சுறுசுறுப்புடன் வாழ வைக்கும் என்று பொருள். தூய்மை தருவது நீறு. திருநீறு கிருமிகளைப் போக்கி நமது உடலைத் தூய்மைப்படுத்தி நோயின்றி வாழ வைக்கும். இராவணன் மிகச் சிறந்த சிவபக்தன். சிவபெருமானின் ஆசிக்கு ஆளானவன். சைவநெறியினை வாழ்நாள் முழுவதிலும் கடைப் பிடித்தவன். திருநீற்றோடு அவன் காட்சி தந்தவன்.

ஆனாலும் தான் என்ற அகந்தைக்கு ஆட்பட்டு, பேராசையுடன் பெண் ஆசையின் விளைவாக மனிதகுல வரலாற்றில் மிகப் பெரிய தாழ்வினை அடைந்தான். அவன் வாழ்வு ஒரு படிப்பினை. அதை நாம் மறக்கவே முடியாது.

சமைத்தல் என்னும் சொல் பக்குவப்படுத்துவதைக் குறிப்பதாகும்.

மனிதனை மனத்தால் பக்குவப்படுத்தி, சிவன் திருவருளைப் பெறவே சைவநெறி வந்தது.

இன்று அதன் சாரத்தை அதிக அளவில் எடுத்துக் கொண்டது இந்து மதமே. மற்ற மதங்கள் முழுமையாக அதைச் செய்யவில்லை. மானிடப் பிறப்பெடுத்ததின் நோக்கமே மனத்தைப் பக்குவப்படுத்தி இறையனுபூதி பெறுவதற்காகவே. இந்தத் தலையாய நோக்கமே மக்கள் மனத்தில் இன்று மறக்கடிக்கப்பட்டு விட்டது.

அடிப்படை நோக்கமே ஆட்டம் காணத் தொடங்கி விட்டது. என்ன செய்வது? சைவநெறியின் பார்வையில் சமயம் என்பது பயிற்சி. சமயம் என்பது அறிவது இல்லை. அது ஒரு அனுபவம். அது ஒரு வாழ்க்கை நெறி ! கோணலாக உள்ள மனித மனங்களை எல்லாம் திருந்தச் செய்வதே சமயமாகும். இந்தச் சமயத்தின் நோக்கம் பிரம்ம ஞானமாகிய பரம்பொருளை நாடி நிற்றலாகும். ஆனால் இறைவனை அடைவதாகச் சொல்லிக் கொண்டு அவரவர் பாதையே உயர்ந்த பாதை என்று இன்று இறுமாப்புடன் உலா வருகின்றனர்.

இதனைப் போக்க, சமயம் கடந்த சன்மார்க்க நெறியான சைவநெறி ஒன்றே வழி காட்ட முடியும். சைவ நெறியின் ஒட்டு மொத்த அடையாளம் திருநீறே. அந்தத் திருநீறே சீரடி சாயிநாதரால் ஊதி என்று அழைக்கப்பட்டுப் பக்தர்களுக்கு வழங்கப்பட்டது; இன்றும் வழங்கப்படுகிறது. இந்த ஊதி ஆகிய திருநீறு காட்டும் நிலையாமையை மறந்து செயல்படுவது திருநீறையே அவமதிப்பதாகும். மனத்தூய்மை உள்ளவனிடம் அச்சம் ஒரு போதும் தலைகாட்டாது. அந்தத் தூய்மையின் தொடக்கமே திருநீறு அணிவதாகும்.

திருநீறு மத அடையாளமல்ல. அது சைவநெறியான வாழ்வியல் நெறியின் அடையாளமாகும். திருநீறு அணியும்போது உண்மையாகவே மெய்சிலிர்க்கும்; அதனால்தான் திருநீறில் மருந்துகள் தெரியும் என்று பாடினார்கள்.

“இராவணன் மேலது நீறு” என்று திருஞானசம்பந்த சுவாமிகள் பாடியுள்ளது ஈண்டு நோக்கத்தக்கது. திருநீற்றை அணிந்து கொண்டு தீய செயல்களில் ஈடுபடுவோர்க்கு அவர் வாழ்வே மிகப் பெரிய பாடம். அதே நேரம் இன்றும் இலங்கையில் சைவநெறி தழைத்து வளர்வது மிகுந்த பாராட்டுக்குரியது ஆகும்.

சைவநெறிக் காவலர் சீரடி சாயிநாதர் திருநீறாகிய ஊதியைக் கொடுத்து அன்பர்களின் உள்ளங்களை வென்றார். பிறப்பிற்குக் காரணமான காமனையும் இறப்பிற்குக் காரணமான காலனையும் வென்று பிறப்பு இறப்பு அற்ற பெருஞ்சுடர் சிவபெருமானே. அந்தச் சிவபெருமான் சிந்தையில் உறவாடக் திருநீறு நமக்குத் துணை நிற்கிறது. ஆறாம் திருமுறை 95ஆவது பக்கத்தில் பாடல் 5 ஊர் பற்றி விளக்கம் தருகிறது.

ஊர் என்றால் அங்கே சிவன் கோவில் இருக்க வேண்டும். ஊரில் உள்ளவர்கள் திருநீறு அணியும் பண்புடையவர்களாக இருக்க வேண்டும் என்று குறிப்பிடுகிறார். இறைவனின் வடிவமே கருணை வடிவம். கதிர்களைக் கொண்டு சூரியனைக் காண்பது போல் இறைவனை அவரது கருணைவடிவில் காண்கிறோம். இதைத் தான் "கற்பனை கடந்த சோதி கருணையே உருவமாகி" என்று சேக்கிழார் பெருமானின் பாடல் நமக்கு அறிவுறுத்துகிறது.

"நமது வினைகள் பொடிபட இறைவன் திருநீற்றைப் பூசியுள்ளான்" இது வாரியார் சுவாமிகளின் திருவாக்கு.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் "நீறு தாங்கிய திருநுதலானை" என்கிறார்.

ஒரு பொருளை நாம் அடையும் முன் அதனால் ஏற்படும் நன்மையைத் தெரிந்து கொண்டால்தான் நாம் வாழ்வில் அதைப் பயன்படுத்துவோம். வைர வியாபாரிக்கு வைரத்தின் பெருமை தெரியும் மற்றவர்களுக்கு தெரியாது. அது போலப் பொருளையும் அருளையும் அளிக்கக் கூடிய திருநீற்றின் பெருமையை நாம் உணர்ந்தால் மட்டுமே உய்வு அடைய முடியும்.

1) திருநீறு உடல் துர்நாற்றத்தை ஒழிக்கும்.
2) தொற்று நோய்களை வரவிடாமல் தடுக்கும். உடல் மனநோய்களைப் போக்கும்.
3) புத்தி சாதுர்யம் ஏற்படும்
4) பாவத்தைப் போக்கும்
5) ஞானத்தை நல்கும்
6) முகத்திற்கு அழகையும் அமைதியையும் தரும்

பசுவின் சாணத்தை நமது நாட்டில் நாம் பயன்படுத்துகிறோம். பசுவின் சாணம் நச்சுத்தன்மையை நீக்கும் தன்மை உள்ளது என்று அறிவியல் ரீதியாக இன்று நிருபிக்கப்பட்டுள்ளது. அதனால் தான் நமது கிராமங்களில் இன்றைக்கும் பசுவின் சாணத்தைப் பயன்படுத்திச் சுத்தம் செய்கிறார்கள்.

“நேர்வானம்” என்ற நச்சுக் கொட்டையை மருத்துவர்கள் மூன்று நாள் சாணத்தில் ஊற வைத்து எடுத்து அதை மருந்தாகத் தயார் செய்கிறார்கள்.

ஈயம் பூசிய பாத்திரத்தில் நவச்சாரம் பூசப்படும்போது அதன் நச்சுத்தன்மையைப் போக்க, அந்தப் பாத்திரத்தில் சாணத்தைக் கரைத்து வைத்துச் சுத்தப்படுத்துகிறார்கள். நோய்களைப் போக்க மருந்தாகவும் திருநீறு பயன்படுகிறது. நாடிகள் வலுப்பெறவும் வாத, பித்த, கப, நோய்களைத் தீர்க்கவும் திருநீறு பயன்படுகிறது.

திருமூலர் தந்த திருமந்திரத்தில் சிவபெருமான், திருநீறு மூலம் நமக்கு வழி காட்டுகிறார் என்று கூறுகிறார். ஆன்மாக்களாகிய நமது தீவினை போக்க நாம் திருநீறு அணிகிறோம். குழந்தையின் நோய் போக்கத் தாய் தந்தை மருந்து அருந்துவது போல நமக்காகச் சிவபெருமான் திருநீறு பூசிக்கொள்கிறார்.

மார்க்கண்டேய மாமுனிவர் எமனை வெல்லத் திருநீற்றையே பயன்படுத்தினார் எனத் திருநாவுக்கரசு சுவாமிகள் தெரிவிக்கின்றார். அவ்வாறே சிவகதியைத் திருநீறு மூலமே நாம் பெறலாம் எனச் சுவாமிகள் அடித்துச் சொல்கிறார். திருநீற்றை நமக்கு உயிர் காக்கும் கவசமாகக் காண்கிறார் மாணிக்கவாசக சுவாமிகள்.

போர் வீரனைக் காக்கும் கவசம் போல் ஆன்மாக்களை வினைகள் தாக்கா வண்ணம் காக்கும் கவசம் திருநீறே என்பது அவரது ஆணித்தரமான கருத்து.

திருப்புகழைப் போல ஒரு அற்புத இறைநெறி நூலைக் காண முடியாது. எல்லா நலன்களையும் தரும் திருப்புகழை, பிறவியை அறுக்கும் திருப்புகழைத் தந்த அருணகிரிநாத சுவாமி திருவண்ணாமலை சென்றபோது சிவபெருமானே அர்ச்சகர் வடிவில் வந்து விபூதி பிரசாதத்தைத் தந்தருளினார்.

அவ்வாறே முருகப் பெருமானை நேரில் கண்டு மகிழ்ந்த அருணாகிரிநாத சுவாமிகள் திருநீறு பூசிய பொன் போன்ற மேனியனே என்று பாடி மகிழ்கிறார்.

திருநீறு : தெய்வத்தன்மை , வாய்ந்த வினைகள் நீக்குவது என்றும் பொருள் அவ்வாறே விபூதி.

வி --- மேலான ; பூதி --- ஐசுவரியம் என்றும் பொருள்; திருநீற்றின் பெருமையை விளக்கவே "பஸ்ம காபலம்" என்ற உபநிடதம் எழுந்துள்ளது. இது திருநீற்றின் பெருமையை விளக்கவே உருவானது என்பதை வைத்தே திருநீற்றின் அருமை, பெருமை கட்டாயம் உலகுக்குத் தெரிய வந்துள்ளது.

திருநீறு அணிந்து பஞ்சாட்சர மந்திரம் ஓதுபவர்களின் உள்ளமே சிவபெருமான் எக்காலமும் நின்று நடனம் ஆடும் அரங்கு என்று உபதேச காண்டம் கூறுகிறது.

அப்பூதி அடிகள், பெருமிழலைக் குறும்பர், கலிசைச் சேவகனார், பத்திரகிரியார் ஆகியோர் திருநீற்றின் பெருமைக்குச் சான்றாகத் திகழ்கிறார்கள். காரைக்கால் அம்மையார் பார்வையில் காலையே போன்றிலங்கும் மேனி கடும் பகலின் வேலையே போன்றிலங்கும் வெண்ணீறு என்று அற்புதத் திருவந்தாதியில் திருநீற்றின் பெருமையை நமக்கு உணர்த்துகிறார்.

"***பால் நிற நீற்றர்***" என்று சிவபெருமானைப் போற்றிப் புகழ்கிறார். பொன்வண்ணத்து அந்தாதியில் சேரமான் பெருமாள் நாயனார் போற்றிப் புகழ்கிறார்.

வெண்மையே ஒளிர அந்த வெண்மைக்குப் பெருமையே வெண்ணீறு.

சீரடி சாயிநாதர் ஊதி என்ற திருநீறு மூலம் அவர் காலத்தில் ஏற்பட்ட சமயப் பிணக்குகளை நீக்கி இந்து இசுலாமிய ஒற்றுமையைப் பேணிக்காத்தார். இசுலாமும் திருநீற்றைப் போற்றவே செய்கிறது. இசுலாமியர்கள் சைவநெறியை என்றும் போற்றி இணக்கமாக வாழ்ந்தனர் என்பதும் உண்மையே.

பாபாவின் காலத்திற்குப் பின் கடந்த நூறாண்டுகளாக இவற்றை

வலியுறுத்தும் மகான்கள் தோன்றவில்லை. அதன் விளைவே இப்போது உள்ள மதப்பூசலுக்கு முக்கிய காரணமாகும்.

திருநீறு மாட்டுச்சாணத்தில் இருந்து தயாரிக்கப்பட்டால் மட்டுமே நல்ல பயன் தரும். இயற்கை வேளாண்மை உணவைப் பசுக்களுக்குக் கொடுப்பதன் மூலமே தூய்மையான சாணம் கிடைக்கும். இப்போது திருநீற்றில் ரசாயனப் பொருள்களைக் கலப்பதால் பலருக்கு அது ஒவ்வாமையை அளிக்கிறது.

திருநீற்றால் (1) நல்வாக்கு (2) இனிய பாற்சோறு (3) நல்லோர் இணக்கம் (4) உயர்ந்த பண்புகள் (5) குறைவில்லாத செல்வம் உறுதி செய்யப்படுகிறது. எல்லா நாட்களிலும் திருநீறு அணிந்து உடல், மன ஆன்ம நலம் காப்போம். வையத்தில் வானுயுரப் புகழ் அடைவோம்.

## திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

### அவை அஞ்சாமை

(அவையறிந்து சொல்லும் போது அந்த அவைக்கு அஞ்சாமல் சொல்லுதல்)

**1. வகை அறிந்து வல்லவை வாய்சோரார் சொல்லின்**
**தொகையறிந்த தூய்மை யவர்.**

வகை அறிந்து - அவையின் வகையினை அறிந்து; வல்லவை - அறிவு வல்லமை உள்ளோரின் அவையில்; வாய்சோரார் - சொல்லுவதில் தடுமாறமாட்டார்; சொல்லின் - சொல்லினது; தொகையறிந்த - தொகையினை அறிந்த; தூய்மையவர் - தூய சொல்லாற்றல் உடையவர்.

சொல்லினது தொகையினை அறிந்த தூய சொல்லாற்றல் உடையவர் அவையின் வகையினை அறிந்து அறிவு வல்லமை உள்ளோரின் அவையில் சொல்லுவதில் தடுமாறமாட்டார்.

வல்லவை - வல்ல அவை - பண்புத்தொகை.

**2. கற்றாருள் கற்றார் எனப்படுவர் கற்றார்முன்**
**கற்றசெலச் சொல்லு வார்.**

கற்றாருள் - கல்வி அறிவுடையவர்களுள்; கற்றார் எனப்படுவர் - சிறந்த அறிவுடையவர் எனச் சொல்லத் தக்கவர்; கற்றார் முன் - கல்வி அறிவுடையோர் முன்; கற்ற - தாம் கற்றவற்றை; செலச் சொல்லுவார் - அவர் மனம் ஏற்குமாறு சொல்லுபவர்.

கல்வி அறிவுடையோர் முன் தாம் கற்றவற்றை அவர் மனம் ஏற்குமாறு சொல்லுபவர் கல்வி அறிவுடையவர்களுள் சிறந்த அறிவுடையவர் எனச் சொல்லத் தக்கவர் ஆவார்.

கற்ற - வினையால் அணையும் பெயர்.

**3. பகையகத்துச் சாவார் எளியர் அரியர்**
**அவையகத்து அஞ்சா தவர்.**

பகையகத்துச் சாவார் - பகைகொண்ட போர்க் களத்தில் இறப்பவர்கள்; எளிய - எளிதான பலர் ஆவர்; அரியர் - அரிதாவார்கள்; அவையகத்து - கற்றோர் அவையில்; அஞ்சாதவர் - அச்சமில்லாமல் சொல்ல வல்லவர்கள்.

பகை கொண்ட போர்க்களத்தில் அஞ்சாமல் இறப்பவர்கள் எளிதான பலர் ஆவர். கற்றோர் அவையில் அச்சமில்லாமல் சொல்ல வல்லவர்கள் அரிதாவார்கள்.

பகையிடத்தில் அஞ்சாதவர் பலர் ; அவையிடத்தில் அஞ்சாதவர்கள் சிலரே ஆவர்.

**4. கற்றார்முன் கற்ற செலச்சொல்லித் தாம்கற்ற**
**மிக்காருள் மிக்க கொளல்.**

கற்றார்முன் - கல்வி அறிவுடையோர் முன்; கற்ற - தாம் கற்றவற்றை; செலச் சொல்லி - அவர் மனம் கொள்ளுமாறு சொல்லி; தாம் கற்ற - தாம் கற்றவற்றில்; மிக்காருள் - மேலானவர்களிடத்து ; மிக்க கொளல் - மிகுதியானவற்றைக் கொள்ளுதல் வேண்டும்.

கல்வி அறிவுடையோர் முன் தாம் கற்றவற்றை அவர் மனம் கொள்ளுமாறு சொல்லி, தாம் கற்றவற்றிலும் மிகுதியானவற்றை மேலானவர்களிடத்துக் கொள்ளுதல் வேண்டும்.

கற்ற - வினையால் அணையும் பெயர்; கொளல் - வியங்கோள் வினைமுற்று.

**5. ஆற்றின் அளவுஅறிந்து கற்க அவைஅஞ்சா**
**மாற்றம் கொடுத்தற் பொருட்டு**

ஆற்றின் - முறைமையால்; அளவு அறிந்து கற்க - அளவை நூல்களை அறிந்து கற்க வேண்டும்; அவை அஞ்சா - அவையினில் அஞ்சாமல்; மாற்றம் - மறுமொழி; கொடுத்தற் பொருட்டு - கூறுதலுக்காக.

அவையினில் அஞ்சாமல் கேட்போர்க்கு மறுமொழி கூறுதலுக்காக முறைமையால் அளவை நூல்களை அறிந்து கற்க வேண்டும்.

**6. வாளொடுஎன் வன்கண்ணர் அல்லார்க்கு நூலொடுஎன்**
**நுண்அவை அஞ்சு பவர்க்கு.**

வாளொடுஎன் - வாளினால் என்ன பயன்?; வன்கண்ணர் அல்லார்க்கு - வலிமை இல்லாதவர்க்கு; நூலொடுஎன் - நூலினால் என்ன பயன்?; நுண்அவை - நுட்பமான அறிவுடையார் அவையினை; அஞ்சுபவர்க்கு - அச்சம் கொள்வாருக்கு.

வலிமை இல்லாதார்க்கு வாளினால் என்ன பயன்? நுட்பமான அறிவுடையார் அவையினைக் கண்டு அச்சம் கொள்பவருக்கு நூலினால் என்ன பயன்?

வாளேந்தும் வலிமை இல்லாதவர்க்கு வாளினால் பயனில்லை; அவையினில் அச்சம் கொள்வார்க்கு நூலைக் கற்றாலும் பயனில்லை.

வாளொடு, நூலொடு - கருவிப்பொருள் ஆயிற்று.

**7. பகையகத்துப் பேடிகை ஒள்வாள் அவையகத்து**
**அஞ்சு மவன்கற்ற நூல்.**

பகையகத்து - பகை கொண்ட போர்க்களத்தில்; பேடிகை ஒள்வாள் - பேடியின் கையில் உள்ள கூரிய வாள்; அவையகத்து - கற்றார் அவையின்கண்; அஞ்சுமவன் கற்ற நூல் - அஞ்சுகின்றவன் கற்ற நூல்.

கற்றார் அவையின்கண் அஞ்சுகின்றவன் கற்றநூல் பகைகொண்ட போர்க்களத்தில் பேடியின் கையில் உள்ள கூரியவாளினைப் போன்று பயனற்றது.

**8. பல்லவை கற்றும் பயம்இலரே நல்லவையுள்**
**நன்கு செலச்சொல்லா தார்.**

பல்லவை கற்றும் - பலவகை நூல்களைக் கற்றாலும்; பயம் இலரே - பயனில்லாதவர் ஆவர்; நல்லவையுள் - கற்றோர் நிறைந்த நல்ல அவையில்; நன்கு - நல்ல முறையில்; செலச் சொல்லாதார் - ஏற்கும்படியாகச் சொல்லமாட்டாதவர்.

கற்றோர் நிறைந்த நல்ல அவையில் நல்ல முறையில் ஏற்கும் படியாகச் சொல்ல மாட்டாதவர் பலவகை நூல்களைக் கற்றாலும் பயனில்லாதவர் ஆவர்.

9. கல்லா தவரின் கடைஎன்ப கற்றறிந்தும்
நல்லா ரவைஅஞ்சு வார்.

கல்லாதவரின் - கல்வி அறிவில்லாதவரை விட; கடைஎன்ப - கீழானவர் என்று சொல்லுவர்; கற்றறிந்தும் - பல நூல்களைக் கற்று அறிந்தவராயிருந்தும்; நல்லாரவை - அறிஞர்களாகிய நல்லார் கூடிய அவையினில்; அஞ்சுவார் - சொல்லுதற்கு அஞ்சுபவரை.

பல நூல்களைக் கற்று அறிந்தவராயிருந்தும் அறிஞர்களாகிய நல்லார் கூடிய அவையினில் சொல்லுதற்கு அஞ்சுபவரைக் கல்வி அறிவில்லாதவரை விடக் கீழானவர் என்று சொல்லுவர்.

இன் - ஒப்புப் பொருளில் வந்தது.

10. உளர்எனினும் இல்லாரொடு ஒப்பர் களன்அஞ்சிக்
கற்றசெலச் சொல்லா தார்.

உளர் எனினும் - உயிருடன் உள்ளார் என்றாலும்; இல்லாரோடு ஒப்பர் - உயிர் இல்லாதவர்களுக்கு ஒப்பாவர்; களன் அஞ்சி - அவையைக் கண்டு அஞ்சி; கற்ற - கற்றவற்றை; செலச்சொல்லாதார் - அவையோர் ஏற்குமாறு சொல்லாதவர்.

அவையைக் கண்டு அஞ்சித் தாம் கற்றவற்றை அவையோர் ஏற்குமாறு சொல்லாதவர் உயிருடன் உள்ளார் என்றாலும் உயிர் இல்லாதவர்களுக்கு ஒப்பாவர்.

எனினும் - இழிவுசிறப்பு உம்மை

## நாடு (நாட்டின் சிறப்பு)

1. தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்வுஇலாச்
செல்வரும் சேர்வது நாடு.

தள்ளா - குறையாத; விளையுளும் - விளைச்சலைத் தருவதும்; தக்காரும் - தகுதியுடைய சான்றோரும்; தாழ்வுஇலா - வறுமை இல்லாத; செல்வரும் - செல்வத்தை உடையவரும்; சேர்வது நாடு - சேர்ந்து இருப்பதே நாடாகும்.

குறையாத விளைச்சலைத் தருவதும் தகுதியுடைய சான்றோரும் வறுமை இல்லாத செல்வத்தை உடையவரும் சேர்ந்து இருப்பதே நாடாகும்.

சான்றோரும் செல்வரும் இருப்பினும் விளைச்சலின் மேன்மை கருதிச் சேர்வது எனப்பட்டது.

தள்ளா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

**2. பெரும்பொருளால் பெள்தக்கது ஆகி அருங்கேட்டான்**
**ஆற்ற விளைவது நாடு.**

பெரும்பொருளால் - பெரும் அளவிலான பொருள்கள் உடைமையால்; பெள்தக்கது ஆகி - எல்லோராலும் விரும்பத் தக்கதாகி; அருங்கேட்டான் - கேடு அரிதான நிலையால்; ஆற்ற - மிகுதியும்; விளைவது நாடு - விளைச்சலைக் கொண்டிருப்பது நாடாகும்.

பெரும் அளவிலான பொருள்கள் உடைமையால் எல்லோராலும் விரும்பத்தக்கதாகி இருப்பது நாடு; கேடு அரிதான நிலையால் மிகுதியும் விளைச்சலைக் கொண்டிருப்பது நாடாகும்.

**3. பொறைஒருங்கு மேல்வருங்கால் தாங்கி இறைவற்கு**
**இறைஒருங்கு நேர்வது நாடு.**

பொறை - தாங்க வேண்டிய சுமை; ஒருங்குமேல்வருங்கால் - ஒன்று சேர்ந்து தன்மேல் வரும்போது; தாங்கி - அந்தச் சுமையினைத் தாங்கி; இறைவற்கு - அரசனுக்கு; இறை - வரிப் பொருளை; ஒருங்கு நேர்வது நாடு - ஒன்றுபட்டுக் கொடுப்பது நாடாகும்.

அரசன் தாங்க வேண்டிய சுமை ஒன்றுசேர்ந்து தன்மேல் வரும்போது அந்தச் சுமையினைத் தாங்கி அரசனுக்கு வரிப்பொருளை ஒன்றுபட்டுக் கொடுப்பது நாடாகும்.

அரசனின் சுமை மிகுதியாகும் போது அவனுக்கு உதவியாய் நிற்கும் மக்களைக் கொண்டது தான் நாடு.

**4. உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்**
**சேராது இயல்வது நாடு.**

உறுபசியும் - மிகுந்த பசியும் ; ஓவாப் பிணியும் - நீங்காத நோய்த் துன்பமும்; செறுபகையும் - பகைவரால் ஏற்படும் போர்ப் பகையும்; சேராது - சேராமல்; இயல்வது நாடு - இயங்குவதே நாடாகும்.

மிகுந்த பசியும் நீங்காத நோய்த் துன்பமும் பகைவரால் ஏற்படும் போர்ப்பகையும் சேராமல் இயங்குவதே நாடாகும்.

பசி, பிணி, பகை இன்றி இயங்குவதே நாடாகும். சேராது - வினைஎச்சம்.

**5. பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும் வேந்துஅலைக்கும்**
**கொல்குறும்பும் இல்லது நாடு.**

பல்குழுவும் - வெவ்வேறு காரணங்களால் ஏற்படும் பலவகைக் கூட்டமும்; பாழ்செய்யும் - தீங்குசெய்கின்ற; உட்பகையும் - நாட்டின் உள்ளேயே உண்டான பகையும்; வேந்து அலைக்கும் - வேந்தனைத் துன்புறுத்துகின்ற; குறும்பும் - கேடு செய்வோரும்; இல்லது நாடு - இல்லாததே நாடாகும்.

வெவ்வேறு காரணங்களால் ஏற்படும் பலவகைக் கூட்டமும் தீங்கு செய்கின்ற நாட்டின் உள்ளேயே உண்டான பகையும் வேந்தனைத் துன்புறுத்துகின்ற கேடு செய்வோரும் இல்லாததே நாடாகும்.

சாதி மதங்களால் உண்டான குழுவும் நாட்டுக்குள்ளேயே மன்னனுக்கு எதிராகச் செயல்படும் பகையும் புறத்தே இருந்து வேந்தனைத் துன்புறுத்தும் பிறபகையும் இல்லாததே நாடாகும்.

**6. கேடுஅறியாக் கெட்ட இடத்தும் வளங்குன்றா**
**நாடுஎன்ப நாட்டின் தலை.**

கேடு அறியா - எந்த நிலையிலும் கெடுதலை அறியாததாய்; கெட்ட இடத்தும் - கெடுதல் நேர்ந்த போதும்; வளங்குன்றா நாடு - வளங்கள் குறையாத நாட்டினை; என்ப - எனக் கூறுவர்; நாட்டின் தலை - நாடுகளில் முதன்மையானது.

எந்த நிலையிலும் கெடுதலை அறியாததாய், கெடுதல் நேர்ந்த போதும் வளங்கள் குறையாத நாட்டினை எல்லா நாடுகளிலும் முதன்மையானது என்று கூறுவர்.

அறியா, குன்றா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

**7. இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்**
**வல்அரணும் நாட்டிற்கு உறுப்பு.**

இருபுனலும் - மழைநீர், பூமியிலிருந்து கிடைக்கும் நீர் எனப்படும் இருவகை நீரும்; வாய்ந்த மலையும் - வளம் தருகின்ற மலையும்; வருபுனலும் - மலையிலிருந்து வரும் நீரும்; வல் அரணும் - வலிமையான பாதுகாப்பும்; நாட்டிற்கு உறுப்பு ஆகும்.

மழைநீர், பூமியிலிருந்து கிடைக்கும் நீர் எனப்படும் இருவகை நீரும் வளம் தருகின்ற மலையும் அம்மலையிலிருந்து வரும் நீரும் வலிமையான பாதுகாப்பும் நாட்டிற்கு உறுப்பு ஆகும்.

இருபுனல் - பண்புத்தொகை ; வருபுனல் - வினைத்தொகை ; வல்அரண் - பண்புத் தொகை

**8. பிணியின்மை செல்வம் விளைவுஇன்பம் ஏமம்**
**அணிஎன்ப நாட்டிற்குஇவ் ஐந்து.**

பிணிஇன்மை – நோய் இல்லாமை; செல்வம் – செல்வம் உடைமை; விளைவு – உணவுப்பொருள் விளைச்சல்; இன்பம் – மகிழ்ச்சி; ஏமம் – பாதுகாப்பு; அணிஎன்ப – அழகு என்று சொல்லுவர்; நாட்டிற்கு – ஒரு நாட்டிற்கு; இவ்ஐந்து – இவை ஐந்தும்.

நோய்இல்லாமை, செல்வம் உடைமை, உணவுப்பொருள் விளைச்சல், மகிழ்ச்சி, பாதுகாப்பு இவை ஐந்தும் ஒரு நாட்டிற்கு அழகு என்று சொல்லுவர்.

என்ப – பலர்பால் வினைமுற்று ; ஐந்து – உம்மை தொக்கது.

**9. நாடுஎன்ப நாடா வளத்தன நாடுஅல்ல**
**நாட வளந்தரும் நாடு.**

நாடு என்ப – நாடு என்று சொல்லுவர்; நாடா வளத்தன – தேடுதல் இல்லாத வளத்தை உடையவற்றை; நாடு அல்ல – நாடு எனக் கருதப்படா; நாட வளந்தரும் நாடு – தேடி அலைந்ததால் செல்வம் சேர்கின்ற நாடு.

தேடுதல் இல்லாத வளத்தை உடைய நாட்டை நாடு என்று சொல்லுவர்; தேடி அலைந்ததால் செல்வம் (தருகின்ற) சேர்கின்ற நாடு, நாடு எனக் கருதப்படாது.

வளத்தன – வினையால் அணையும் பெயர்; நாடா – எதிர்மறைப் பெயரெச்சம் ; நாட – பெயரெச்சம்

**10. ஆங்கு அமைவு எய்தியக் கண்ணும் பயம்இன்றே**
**வேந்து அமைவு இல்லாத நாடு.**

ஆங்கு அமைவு – மேற்சொன்ன பண்புகள்; எய்தியக் கண்ணும் – நிறைந்திருந்த போதும்; பயம் இன்றே – பயனில்லை; வேந்து அமைவு இல்லாத நாடு – நல்ல மன்னனோடு பொருந்துதல் இல்லாத நாடு.

மேற்சொன்ன பண்புகள் நிறைந்திருந்த போதும் நல்ல மன்னனோடு பொருந்துதல் இல்லாத நாடு பயனில்லாததாகும்.

இன்றே – தேற்றேகாரம்.

*(தொடரும்...)*

## திருஅருட்பா - அனுபவமாலை
## வள்ளல் பெருமான் அருளிய "குடிசைப் பாட்டு"

(பேராசிரியர் மு. பழனி இராகுலதாசன்)

வள்ளல் பெருமான் அருளிய "திருஅருட்பா" ஆறாம் திருமுறையில், "திருவடிப்புகழ்ச்சி" என்ற தலைப்பில் ஒரு பகுதி அமைந்துள்ளது. "எண்சீர் அடி ஆசிரிய விருத்தம்" என்ற யாப்பில் பத்துப் பாடல்கள் உள்ளன. "என் உள்ளம் சிறு குடிசை போன்றது; அந்தச் சிறு குடிசைக்குள், என் இறைவ, நீ வந்து புகுந்தனையே!" என்று வள்ளல் பெருமானது பேருள்ளம் உருகி, உருகித் தவிக்கும் பாங்கில் பாடல்கள் அமைந்துள்ளன. பத்துப் பாடல்களையும் நின்று, நிதானித்துப் படித்து நிமிரும் போது நம் உள்ளம் உருகித் தவித்துத் தத்தளித்துப் போகிறது. பயின்றுவரும் சொல்லாட்சி அடிப்படையிலும் எளிமையாய்ப் பொருளை உள்வாங்கிக் கொள்ள வேண்டும் என்ற அடிப்படையிலும் கட்டுரைக்குக் "குடிசைப் பாட்டு" என்று தலைப்பு இடப்பட்டுள்ளது. அருட்பா அன்பர்கள் இப்பகுதியினைப் பயிலும்போது "குடிசைப்பாட்டு" என்றே மனத்தில் இருத்திக் கொண்டு படிக்கலாம். "குயில் பாட்டு", "கண்ணன் பாட்டு" என்ற தலைப்புக்களுடன் இலக்கியப் பயிற்சி உடைய வாசகர்களுக்கு இந்தச் சொல்லாட்சி வியப்பை அளிக்காது.

இறைவ, வானத்துப் பிரமர்களும், நாரணரும் வேறுபிற தவசீலர்களும் பலநாள் தவமாய்த் தவம் ஆற்றினர்; மணிமாடம் அமைத்து, தேன் பிலிற்றும் மலரணையும் அமைத்து, பளிங்கறையும் அமைத்து, "இறைவ, திருவடி தந்து அருள்க" என்று வருந்தி, வருந்தி வேண்டினர்; ஆனால், இறைவ, நீ, அங்கெல்லாம் செல்லவில்லை; மாறாக, நான் வசிக்கும் எளிய குடிசைக்கே வந்து எழுந்தருள் செய்தீர்; நல்ல திரு அருள் அமுதமும் நல்கினீர்; கூரை வேய்ந்த குடிசையில் மட்டுமா இறைவா, நீ நுழைந்தாய், இல்லை இல்லை; எளியேன் உள்ளம் என்கிற சிறுகுடிசைக்குள்ளும் அல்லவா நுழைந்தாய் ! (பாடல் 1) இறைவ, பிரமனும் வேறு பிறரும் ஒருநாள், இருநாளா ? பன்னாள், பன்னாள் முயன்றனர்; பகலவன் ஒளி வீசுவது போல ஒளிவீசும் நவமணிகள் பதித்த சிம்மாசனம் அமைத்தனர்; "அரசே, வருகை புரிந்து எம்மை ஆண்டு அருள்க" என்று வருந்தி வருந்தி வேண்டினர்;

இறைவ, நீ, அங்கே செல்லவில்லை; மாறாக, மன்றில் நடமாடும் உனது பொற்பாதங்கள் சிவந்து போகுமாறு, ஒரு வளமும் இல்லாத, அசுத்தம் நிரம்பிய, எனது உள்ளம் என்ற குடிசைக்குள் நுழைந்தனையே ! (பாடல்- 2)

இறைவ, நினது திருவடிகள் உலகமெலாம் புகுந்து, திரிந்து உலவிவரினும் தடையிலாது, ஒளிதரும் ஆற்றல் மிக்கவை; வெள்ளிய ஒளிமிகுந்த இயற்கைத் தன்மை மிகுந்தவை; வேதமும் வேதத்தின் முடிவுமாய் இலங்குபவை; அத்தகைய திருவடிகள் இதுகாறும் கருத்தின் வண்ணமெல்லாம் எனக்கு உவந்து அளித்துப் பேரின்பம் கொடுத்தது போதாதோ ! இப்போது, கொடுமை பல புரிந்த புலையனேனாகிய என் குடிசைக்குக் குலவி வந்து நுழைந்தனையே ! (பாடல் – 3)

இறைவ, நின் திருவடிகள் தடை அறியாதன; நிகரில்லாதன; தத்துவங்கள் அனைத்துக்கும் தாரகமாய் அமைவன! அந்தத் தாரகங்களுக்கு விடையும் ஆகி, மேடையிலே அமர்ந்து, இன்னது என்று அறிய முடியாத தன்மையும் ஆகிய நின் திருவடிகள் சிவந்து போகும் அளவுக்கு, எனது நலிவெலாம் நீங்கும்படி எனக்கு ஞானமும் அளித்தாய் ! இந்தக் கொடையெல்லாம் போதாதோ ? என் அரசே! இப்போது என் குடிசைக்குள்ளேயும் குலவி நுழைந்தனையே ! (பாடல் –4)

இறைவ, நின்திருவடிகள் சிறிதும் துரிசு இல்லாதவை; தூய்மையானவை; நிறைவானவை; இயல்பான அனுபவங்கள் எத்தனையோ அத்தனைக்கும் முதலிடம் ஆனவை; மறை முடியோடு, ஆகமத்தின் மணிமுடிக்கும் மேல் முடியாய் பிரகாசிப்பவை; சாசுவதமான மெய்ஞ்ஞான மணிமேடையில் அமர்ந்திருப்பவை; அத்தகைய நிறையருள் சீரடிகள் சிவந்து போகும் அளவுக்குக் காட்சி தந்து, எனக்கு நான் நினைத்தன எல்லாம் தந்து, அருள் புரிந்தாய் ! அவை நிலைபெறவும் வழி அமைத்தாய் ! இவ்வாறெல்லாம் நீ, எனக்குக் குறைவிலாது அளித்த பெருவரங்கள் போதாவோ ! இப்போது, நான் கொடும் செயல்கள் புரியும் புலையனாக இருக்கிறேன்; அத்தகைய என்னுடைய குடிசைக்குள்ளும் குலவி நுழைந்தனையே... (பாடல் – 5)

இறைவ, நினது திருவடிகள் உருவம் கொண்டவை; உருவம்

இல்லாத நிலையும் கொண்டவை; ஆனால் பாயும் உணர்வால், நிலை பெற்றவை; ஆனாலும் 'ஒரு தன்மை' கொண்டவை; வேதாந்தம் முதல் கலாந்தம் வரையிலான அருள் என்னும் மேன்மைமிகு மேடையில் திருவாக அமர்ந்தவை; இத்தன்மைத்தான பெருமைகள் கொண்ட திருவடிகள் என்பொருட்டு, சிவந்துபோகுமாறு நடந்து நடந்து, நான் நினைத்தவெல்லாம் கொடுத்தாய்; இத்தனையும் என்பொருட்டுச் செய்துவிட்டு, இவை அனைத்தும் போதா என்று நினைத்து, இப்போது, கொடுமைகள் நிறைந்த புலையனாகிய என் குடிசைக்குள் சிறிதும் மனம் கோணாமல் குலவி நுழைந்தாயே ! (பாடல் – 6)

இறைவ, நினது மணிமேடை மணம் நிரம்பியது; ஒளிமிக்கது; மந்திர ஆதாரம் மிக்கது; வல்லது; நல்லது; மத மாச்சரியங்கள் கடந்தது; வண்ணம் நிறைந்தது; வளம் பெற்றது; இத்தகைய தன்மைகள் நிரம்பிய வெளியில் அமைந்த அழகிய மணிமேடை மீது அமர்ந்திருக்கும் திருவடிகளை எடுத்து வைத்து, என்பால் எண்ணம் பதித்து, என் சிந்தையெல்லாம் இனிக்குமாறு அளிசெய்தாய்! இவ்வாறு, என்பொருட்டு இங்கு நீ செய்த இவையெல்லாம் போதாது என்று அரசே! நீ நினைத்தாயோ ! ஞானமும் குணமும் ஆன மலையே, என் குருவே, என் பதியே, கொடுமை நிறைந்த புலையனான என் குடிசைக்குள்ளேயும் குலவி நுழைந்தனையே ! (பாட்டு – 7)

இறைவ, முதன்மை பெறுவதான, வேத ஆகமத்தின் முதலும் நடுவும் முடிவும் கூடச் செல்ல முடியாத இடம்வரைக்கும் கூடச் சென்று வரக்கூடியதாய், பரம்பரமாய், அதற்கு மேலும் சென்று பரவும் சிதம்பரமாய், பதிவெளியில் விளங்குகிற மதியாய், சிவமாய், மேடையிலே மதிப்போடு வீற்றிருந்த திருவடிகளை எடுத்து வைத்து நடந்து, என் வாழிடம் அடைந்து, என் சிந்தனை முழுதும் நிறைந்த என் அரசே! எத்தனையோ சிறுமைகள் செய்யும் குரங்குமனம் உடைய இந்தச் சிறியேனுக்கு இதுவரை நீ புரிந்தன எல்லாம் போதாதோ? இப்போது, கொடுமைகள் நிறைந்த புலையனான என் குடிசைக்குள்ளேயும் குலவி நுழைந்தனையே ! (பாடல் – 8)

இறைவ, பற்றிய பற்றுக்கள் அனைத்தையும் பற்றுஅற விட்டுவிடுவதற்கான பட்டறிவாம் பான்மை ஒன்றே வடிவமாகப் பழுத்த

சான்றோரும் உற்று ஓர்ந்து அறிவதற்கரிய ஒரு பெருவெளியில், ஓங்கித் திகழும் அழகிய மேடையில், திகழும் சேவடிகள் நினது சேவடிகள். அத்தகைய சேவடிகள் படியுமாறு வந்து, எனக்குக் கருத்தும் கொடுத்து, பிறவாமல், இறவாமல் நான் திகழுமாறு என்னை ஆக்கிவைத்த அரசே! இத்தனையும் நீ வழங்க, நான் பெற்றுப் பெருவாழ்வு வாழ்கின்றேனே! இது எனக்குப் போதாது என்று கருதியா, நீ, இப்போது என் குடிசைக்கு வந்து கோணாது, குலவி, நுழைந்திருக்கிறாயே ! (பாடல் - 9)

இறைவ, கருவியொடு நடந்தாய், பிற கரணங்கள் எல்லாம் கடந்து நடந்தாய்; அதன் மேலும் மேலும் நடந்து காணாதது எல்லாம் கண்டு நடந்தாய்! ஒரு நிலையில் அனுபவமே உருக்கொண்டாற்போல் நடந்தாய்! பழுத்த உணர்ச்சியிலும் கண்டு கொள்ளமுடியாத ஒரு பெருவெளியெங்கும், மேடையிலும் நடந்தாய்! அதுமட்டுமா? மலர்த்தியும் மலர்ந்தும் வந்து என் கருத்துக்கள் அனைத்தையும் நீ வழங்கி, விளங்கி, நான் இன்புறச் செய்தாய் ! குருமணியே, என் அரசே! இது போதாதா எனக்கு ! போதாது என்று கருதியோ, அரசே! கொடிய புலைத்தன்மை உடையவனான என் குடிசைக்குள், குலவி நுழைந்திருக்கிறாயே! (பாடல் - 10)

- வாசகர்களாகிய நாமும் இப்போது வள்ளல் பெருமானின் குடிசைக்குள் இருக்கிறோம்.

## திருவிளையாடற்புராணம்

### பாண்டியன் சுரம் தீர்த்தது

அரிமர்த்தன பாண்டியனது குமாரன் சகநாத பாண்டியனுக்குப் பின்னர் வீரபாகு தொடங்கி ஒன்பது பாண்டியர்கள் ஆலவாயை ஆண்டு சென்றனர். அவர்கள் வழி வந்த கூன் பாண்டியன் நாட்டை ஆண்டு வந்தான்.

நெடுமாறனான கூன் பாண்டியன் புஜபலபராக்கிரமத்தால் மிகவும் புகழ் பெற்று விளங்கினான். சேர சோழ வேந்தர்களைப் போரிலே வென்று முத்தமிழ் நாடுகளையும் ஒரு குடையின் கீழ் ஆண்டு வந்தான். சேர வேந்தன் பொன்மணிக் குவியல்களையும் அழகான பெண்டிர்

குழாத்தையும் கொடுத்துத் தனது நாட்டை மீட்டுச் சென்றான். சோழவேந்தன் தனது எழில் மகளாகிய மங்கையர்க்கரசியைப் பாண்டிய வேந்தனுக்குத் திருமணம் செய்துகொடுத்துத் தன் வளநாட்டைத் திரும்பப் பெற்றான். மங்கையர்க்கரசிக்கு சீதனமாக ஏராளமான செல்வங்களையும், ஆடை ஆபரணங்களையும் நன்செய்களையும், சேடியர்களையும் வழுதி மகிழும் வண்ணம் கொடுத்தான். சிறந்த குணமுடையவரும் சாஸ்திர ஞானத்திலே சிறந்து விளங்கியவருமான குலச்சிறையார் என்பவரையும் உடன் அனுப்பித் தந்தான்.

கூன்பாண்டியன் குலச்சிறையாரைத் தனது பிரதம மந்திரியாக அமைத்துக்கொண்டு நாட்டைப் பரிபாலித்து வந்தான். முன் செய்த தீவினைப் பயன் போலும் பாண்டியனது உடலில் கூன் இருந்தது போலே உள்ளத்திலேயும் கூன் உண்டாயிற்று. வைதிக சைவ மார்க்கத்தைக் கைவிட்டு நெடுமாறன் சமணனாகி விட்டான். "மன்னன் எவ்வழி அவ்வழி மக்கள்" என்பது மெய்யாக, பாண்டியன் ஆருகத மதம் சார்ந்ததும் பாண்டியநாடு முழுவதுமே சமண இருளிலே மூழ்கியது. விபூதி சாதன மார்க்கமாகிய சைவ மதமும் மோட்சத்தை அடைவிக்கும் தவநெறியும் வேதவொழுக்கமும் குன்றி மறைந்துபட்டன; நாடு முழுவதும் பறிதலையும், பாயுடையும், பாசிப் பல்லும், உறிக்கமண்டலமும், மயிற்பீலியும் "அத்தி நாத்தி" மந்திரமும் மலிந்தன. மூதேவியை நிகர்த்த சமணம் எங்கும் பரவித் தங்கியது.

கூன் பாண்டியனது மனைவியான கற்பிற் சிறந்த மங்கையர்க்கரசியும் குணம் சிறந்த மந்திரி குலச்சிறையாரும் மனம் புழுங்கினர். சிவபெருமானது திருவடிகளையே தியானம் செய்து வந்தனர்.

மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் பெருங்கவலை கொண்டு, திருக்கோயில் சேர்ந்து சோமசுந்தரப் பெருமான் திருமுன் வணங்கி நின்று "எம்பெருமானே! பாண்டி நன்னாட்டிலே சமணக் களை மண்டிக் காடாக்கி விட்டது; மீண்டும் வேதமார்க்கம் தழைக்கச் செய்ய அருள்புரிபவர் யாரோ? கடவுளே! கொடிய சமண வலையிலே அகப்பட்டுழலும் அறிவிழந்த மன்னனுக்கு நல்லறிவு ஈந்து நன்னெறியில் திருப்பியருள வேண்டும்", என்று முறை செய்து வேண்டினர்.

அது சமயம் தில்லைப் பகுதியிலிருந்து க்ஷேத்திராடனம் செய்து கொண்டு வந்த அந்தணன் ஒருவன் சோமசுந்தரப் பெருமானைத் தரிசிக்கும் பொருட்டு அங்கே வந்து சேர்ந்தான். பாண்டியன் தேவியும் மந்திரியாரும் அவ்வந்தணனைக் கண்டு மறையவரே! எங்கிருந்த வருகிறீர்? என்று வினவினர். "சோழவேந்தன் அரசோச்சும் காவிரி நாட்டிலிருந்து வருகிறேன்" என்றான். "ஏதேனும் விசேஷம் உண்டோ?" என்று வினாவினர் இருவரும். சிவநேசனான அவ்வேதியன், "விசேஷம் உண்டு! உண்டு! சீர்காழிப் பதியிலே அந்தணர் குலத் தோன்றலான சிவபாதஹிருதயருக்கும் அவர் தம் இல்லாள் பகவதி அம்மையாருக்கும் தவப்பயனாக ஒரு புதல்வர் அவதாரம் செய்தார். மூன்றாம் வயதிலேயே ரிஷபாரூடரான சிவபெருமானைத் தரிசித்து உமையம்மையாரின் கையாலே ஞானப்பால் வாங்கி உண்டார். ஆதலால் இளம் வயதிலேயே சிவ ஞானம் கைவரப் பெற்றார். சிவ ஞானத்துடன் சம்பந்தம் கொண்டதாலே திருஞானசம்பந்தர் என்ற திருநாமம் பெற்று விளங்குகிறார். சத்திய சொரூபமான ஞானசரஸ்வதியருளால் அருமறைகளை யெல்லாம் அவர் அருந்தமிழ்ப் பாடலாக இசைத்தருளுகிறார். வேத விழுப்பொருளை வடித்தெடுத்து, சிவமணம் கமழும் தெய்வத் தமிழ்ப் பாடல்களாக சிவக்ஷேத்திரங்கள் தோறும் சென்று பாடிப் பாடிப் பெருமானுக்குப் பதிக மாலை சூட்டி விளங்குகின்றார். மேலும் அவர் சிவபெருமான் திருவருளால் பொற்றாளம், முத்துச் சிவிகை, திருச்சின்னம், முத்துப் பந்தல் முதலானவை பெற்றுள்ளார். திருவீழிமிழலைப் பதியில் படிக்காசு பெற்றார். திருமறைக் காட்டிலே வேதங்கள் வழிபாடு செய்த திருக்கோவில் கதவு அடைபடுமாறு பாடியருளினார். பற்பல அற்புதங்கள் நிகழ்த்திச் சிவப்பதிகளிலே சென்று திருப்பதிகங்கள் பாடி வரும் ஆளுடைப்பிள்ளை சோமசுந்தரப் பெருமானைத் தரிசிக்கும் பொருட்டு உங்கள் பாண்டியநாட்டுக்கும் வருவார்" என்று மகிழ்ச்சி பொங்கக் கூறினான்.

அந்தணாளன் மொழிந்ததைக் கேட்ட பாண்டியன் தேவியாரும் மந்திரிமாரும் அப்போதே சிவானந்தத்திலே மூழ்கினர். உடனே சீகாழிப்பதிவாழ் திருஞான சம்பந்தருக்கு விண்ணப்ப ஓலையொன்று எழுதி அவ்வந்தணன் கையிலேயே கொடுத்தனுப்பினார்கள். பின்னர்

அரசியாரும் அமைச்சரும் சிவபெருமானை வணங்கி அரண்மனை சென்றனர்.

விரைந்து சென்ற அந்தணன் திருஞானசம்பந்தரை வேதாரண்ய க்ஷேத்திரத்திலே கண்டு வணங்கி ஆலவாய்ப்பதியிலிருந்து தான் பெற்றுவந்த ஓலையைக் காட்டினான். சீகாழிப் பிள்ளையார் ஆலவாய்க்கு எழுந்தருளி சமண இருள் போக்கி, பாண்டிய மன்னவனுக்கு விபூதி தந்து நாட்டினையே திருநீற்றொளியில் விளங்கச் செய்ய வேண்டுமென அதிலே கண்டிருந்தது.

திருஞானசம்பந்தர் பாண்டிய நாட்டிற்குப் புறப்பட எழுந்தருளினார். அது சமயம் அருகேயிருந்த திருநாவுக்கரசர் அவரைப பார்த்து, ஆஹா! இது முறையில்லை, நீர் குழந்தை, சமணர்கள் பழிபாவத்துக்குப் பயப்படாதவர்கள். அங்கே போகவேண்டாம். உமக்கு இப்போது நாளும் கோளும் சரியாயில்லை என்று கூறித் தடுத்தார். அதனைக்கேட்ட திருஞானசம்பந்தர், இறைவன் திருவருளால் சமணர் தந்த கொடுந் துன்பங்களனைத்தையும் தப்பி வந்த அன்பார்ந்த அப்பரே! நாளும் கோளும் சிவபெருமானின் ஆணைவழி நடப்பன. எம்பெருமான் திருவருள் காக்கும் என்று மொழிந்து கோளறு திருப்பதிகம்பாடிப் புறப்பட்டார்.

முத்துப் பந்தலின் கீழ் முத்துச்சிவிகையின் மேலே ஏறிச் சென்றார். செல்லும் வழிகளிலுள்ள சிவஸ்தலங்களையெல்லாம் தரிசித்துத் தேவாரப் திருப்பதிகங்கள் பாடிய வண்ணம் சோழநாடு தாண்டிப் பாண்டி நாட்டினை அடைந்தார். ஆலவாயம்பதியை நெருங்கி வந்து கொண்டிருந்தார். திருஞானசம்பந்தரின் முன்னே செல்லும் பரிவாரங்களில் திருச்சின்னம் ஓதுவோர், "பரசமய கோளரி வந்தான்; சமணவிருள்கெட உதித்த ஞானபானு வந்தான்" என்று பன்முறை கூறிச் சென்றனர். அந்த ஆரவாரத்தைக் கேட்ட சமணர்கள் நேரிலே வந்தார்கள். "உங்கள் கடவுளைக் கும்பிட வந்தால் வெற்றிச் சின்னம் எதற்கு? வீண் கர்வம் எதற்கு? நீங்கள் எந்தச் சமயத்தார்களை வெற்றி கொண்டீர்?" என்று சொல்லிச் சிவனடியார்களைத் தடுத்தனர். சீகாழிப் பிள்ளையார் அந்தச் சிறு தடையை எளிதிலே விலக்கிவிட்டு ஆலவாய்த் திருநகரை அடைந்து சோமசுந்தரப் பெருமானின் திருக்கோவில் புகுந்தார். அம்மையப்பரைத் தரிசித்து உடல் குளிர உளம் குளிரப்

பன்முறை வலம் வந்தார். சிவானந்த லகரியிலே அழுந்தியவராகி, "காமனைக் காய்ந்து தைந்த தேவனே! அடியேன் சமணர்களோடு வாது செய்ய வலிமை பெறுமாறு திருவருள் பாலிக்க வேண்டும்" என்று திருப்பதிகம் பாடி வேண்டிக் கொண்டார்.

திருவருள் பெற்றுத் திருக்கோவிலிலிருந்து வெளி வந்த திருஞானசம்பந்தப் பிள்ளையாரை வாசிக முனிவர் என்ற தவப்பெரியார் எதிர்கொண்டு தமது திருமடத்திலே எழுந்தருளுமாறு வேண்டிக் கொண்டார், ஞானசம்பந்தரும் அதற்கு உடன்பாடு தெரிவித்து அம்மடத்திலே தங்கினார். பகற்பொழுதிலே திருவமுது செய்தருளினார். அன்றிரவு சைவ சமயத்திடம் பகைமை பூண்ட சமணர்கள் தீயகாரியம் செய்தனர். அபிசார ஹோமம் செய்து அக்னிதேவனை அழைத்து, "எங்கள் பகைவன் தங்கியிருக்குமிடத்தை உண்டு வருக" என்று ஏவினர். ஆனால், அக்னிதேவன் அஞ்சி நின்றான்! ஆகவே, சமணர்களே தங்கள் கையில் தீ எடுத்துச் சென்று வாகீச மடத்திலே வைத்தனர். நெருப்பு பற்றியது. புகைந்து எழுந்தது. அதுகண்ட சிவனடியார்கள் திருஞானசம்பந்தரிடம் சென்று தெரிவித்தனர். பிள்ளையார் வெந்தீயை நோக்கினார். "அக்கினியே சமணர்களது பொய் மொழியை ஏற்றுக்கொண்டு சத்திய வேத மார்க்கத்தைக் கைவிட்ட கூன்பாண்டியனைச் சென்று பற்றுக" என்று பணித்தருளிச் சோமசுந்தரப் பெருமான் மீது பதிகம் பாடி விடுத்தார்.

தீ உடனே மடத்தை விட்டகன்று, கூன் பாண்டியனைச் சேர்ந்து சுர நோயாகப் பற்றியது. சுர நோயின் வெப்பத்தால் பாண்டியன் அணிந்தகலன்கள் பொரிந்துதுகள் பட்டன. மாலை தீய்ந்தது, படுக்கை சருகாகிவிட்டது, பாண்டியன் பதைபதைத்துப் போனான். தலைவன் நிலை கண்ட பாண்டிமாதேவி மங்கையர்க்கரசியாரும் அமைச்சர் குலச்சிறையாரும் பெரிதும் மனம் தளர்ந்தனர். மருத்துவ நூல் வல்லவரை அழைத்துச் சிறந்த மருந்துகளாகக் கொடுக்கச் செய்தனர். மணிமந்திரம், ஔஷதம் எதிலுமே கட்டுப்படவில்லை கடுஞ்சுரம். வர வர வளர்ந்து கொண்டேயிருந்தது. பிறகு சமணர்களை அழைத்துக் கொண்டு வந்தனர். அவர்களும் தங்கள் தபோபலத்தைக் கொண்டும் மருந்துகளைக் கொண்டும் சிகிச்சை செய்து பார்த்தனர். பாண்டியனது

வெப்ப நோய் கொஞ்சமும் தணிந்தபாடில்லை. அன்றிரவு கழிந்தது. மறுநாள் விடிந்தது.

மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் பாண்டியனை நோக்கி, "காலபாசம் போன்ற இச்சுடுநோய் திருஞானசம்பந்தரால் தீருமேயல்லாது வேறு எவராலும் தீராது," என்றனர். சமணச் சார்புடைய வேந்தனோ, "நீங்கள் சொல்லும் சைவர் திருநீறணிந்து என்னைக் காணல் அடுக்குமா?" என்று வினாவினான். "தலைவரே! எப்படியாவது நோய் தீர்நது தாங்கள் உய்யவேண்டுமல்லவா?" என்று அவர்கள் சொன்னதும், "நல்லது, அவரை இங்கே வரவழையுங்கள்" என்று சம்மதம் தெரிவித்தான்.

பாண்டியன் சம்மதம் தெரிந்த அமைச்சர் குலச்சிறையார் எல்லையற்ற உவகை கொண்டார். ஆலவாய் நகரைத் திருவிழா நகரமெனத் தோன்றச் செய்தார். மங்கலச் செயல்கள் மாநகரெங்கும் மலிந்தன. பிறகு குலச்சிறையார் பிள்ளையார் எழுந்தருளியிருந்து விளங்கிய திருமடம் சேர்ந்து ஞானாமிர்தத்தைக் கண்டு மகிழ்ந்தார். பாண்டிமா தேவியாரும் வணங்கி ஒருபுறம் நின்றிருந்தார். குசலப் பிரச்னங்கள் முறையே ஆன பின்பு அமைச்சரும் அரசியாரும் சேர்ந்து,"இன்றைய தினம் உங்களது திருவருளினால் சமணர்கள் அழியுமாறும், பாண்டிநாடு திருநீற்றால் உய்யுமாறும் மன்னவன் உடலிலே கொடிய சுரம் கண்டுள்ளது. அந்த வெப்பு நோயை நீர் தாம் தீர்த்தருள வேண்டும்," என்று திருவடி பணிந்து வேண்டினர். திருஞானசம்பந்தரும் அங்ஙனமே செய்ய வாக்குத் தந்தார். தமது முத்துச் சிவிகையின் மேல் ஆரோகணித்து மாறனின் திருமாளிகைக்குச் செல்வாரானார். வாசல்கள் தோறும் தூபம், மங்கல விளக்கு, பூரணகும்பங்கள் முதலியன வைக்கப்பட்டிருந்தன. இன்னிசை முழங்கக் காழிப் பிள்ளையார் பாண்டியன் முன்பு சென்று ஒரு ரத்தனாசனத்தின் மேல் அமர்ந்தார். கூன்பாண்டியன் திருஞான சம்பந்தரைப் பார்த்தான். காழிப்பிள்ளையாரது திருப்பார்வை பட்டதாலே பாண்டிய மன்னன் சற்றே தெளிவுபெற்றார். "இந்தப் பாவியினுடைய பிணிபோக்கி ஆட்கொண்டருள்க," என்று வேண்டிக் கொண்டான்.

பிள்ளையைப் பார்த்துப் பாண்டியன் மொழிந்ததைக் கேட்ட அருகிருந்த சமணர்கள், "கலை வல்லோனே! தங்களது வலப்பக்கத்து நோயை இவரும் இடப்பக்கத்து நோயை நாங்களும் தீர்க்கும்படியாக ஆணையிடுவாயாக"என்று சொல்லினர். வேந்தன் சம்மதம் தருவதற்கு முன்னதாகவே தங்கள் மயிற்பீலிகளைக் கையிலெடுத்துக் கொண்டு அருக மந்திரம் சொல்லி இடப்புறத்தைத் தடவத் தொடங்கினர். கமண்டல நீரைத் தெளித்தனர். ஆனால் நோய் பல மடங்கு பெருகியது. சமணர்கள் கருவம் ஒடுங்கியது. வெட்கமடைந்து வறிதே இருந்தனர். திருஞான சம்பந்தர் மாறனது வெந்நோய் தீர்க்கும் பொருட்டாகத் தமது பையிலிருந்த திருநீற்றைக் கையில் எடுத்தார். அவர் எடுக்கும்போதே சமணர்கள், "மாய நீறு இது" என்று கூறி மறுத்தனர். உடனே காழிப் பிள்ளையும் அதைப் போட்டுவிட்டு, "ஆலவாய் அண்ணலின் திருமடைப் பள்ளியில் உள்ள சாம்பலை அள்ளி எடுத்துக் கொண்டு வாருங்கள்" என்று மொழிந்தார். வேந்தனது ஏவலர் உடனே சென்று அள்ளிக் கொண்டு வந்தனர். அதனைத் தன் கையிலே பெற்று, "மந்திரமாவது நீறு, வானவர் மேலது நீறு" என்று தொடங்கும் திருநீற்றுத் திருப்பதிகம் இயம்பிக் கூறி, பாண்டியனது வலப்பக்கத்திலே திருவாலவாயன் திருநீறென அதனைத் தடவினார். வலப்பக்கத்து வெந்நோய் ஓடி மறைந்தது. பனி நீர் குழைத்த சந்தனம் பூசியது போன்ற குளிர்ச்சி கண்டது.

ஒருபுறம் தண்மை கண்ட பாண்டியன் மிக மகிழ்ந்தான். காழியர் பிள்ளையைப் பார்த்து, "பெரியோனே! இந்தச் சுரம் பொறுக்க முடியாதது! சமணர் சார்பான குற்றத்திலிருந்து நீங்கி எளியேன் உய்தி பெற வேண்டுமானால் இடப் பக்கத்து நோயையும் தாங்களே நீக்கியருள வேண்டும்" என்று மிகவும் இரங்கி வேண்டிக் கொண்டான்.

திருஞான சம்பந்தரும் சோமசுந்தரப் பெருமானை உளத்திருத்தி விபூதியை எடுத்துத் தமது திருக்கையால் இடப்பக்கத்திலேயும் பரிவுடன் தடவிக்கொடுத்தார். உடனே பாண்டியனது நோய் தீர்ந்ததோடு கூனும் நிமிர்ந்தது. கொடுமை நீங்கிய உடல் பெற்ற பாண்டியன் புதுமெருகு பெற்றவனாகத் துலங்கினான். அதனால், முன்பு கூன்பாண்டியனாக அவலமெய்தியவன், சௌந்தர்ய பாண்டியன் எனும் பெயர் பெற்றான்.

திருஞான சம்பந்தருடைய கடாட்சத்தாலும், ஸ்பர்சத்தாலும், திரு மொழிகளாலும் நன்கு தெளிவு பெற்ற பாண்டிய மன்னன் அவரது தளிரடிகளிலே வீழ்ந்தான். அவரிடமிருந்து பஞ்சாக்ஷர மகா மந்திரத்தை உபதேசமாகப் பெற்றான். திருவிளக்கம் பெற்றதாலே சமணநெறியை விடுத்தான். பழைய வைதிகச் சைவ நெறியைப் பற்றிப் புண்ணிய சீலனானான்.

*(தொடரும்...)*

## மடாலய நிகழ்வுகள்

28.5.2022 அன்று முற்பகலில் தெய்வத்திரு நாச்சியப்ப சுவாமிகளின் 99ஆவது பிறந்தநாள் விழா நிகழ்ந்தது. சீர்வளர்சீர் மெய்யப்ப சுவாமிகள் தலைமையில் நடைபெற்ற விழாவில் கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக் மேனிலைப் பள்ளி முதல்வர் திருமதி. மணிமொழி மோகன் வரவேற்புரை ஆற்றினார். தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார் விழாவில் கலந்து கொண்டு சீவக சிந்தாமணி உரை முதற்பாகம் (முனைவர் கரு. முத்தய்யா எழுதியது) நாலடியார் உரை (பேரா. ம. கார்மேகம் எழுதியது) பரமஹம்சர் மொழிந்த உருவகக் கதைகள் (முனைவர் மு. பழனி இராகுலதாசன் எழுதியது) ஆகிய மூன்று நூல்களையும் வெளியிட்டு வாழ்த்துரை வழங்கினார். கோவிலூர் சுவாமிகள் பெற்றுக் கொண்டார். நிறைவாக மடாலய மேலாளர் திரு.எஸ். அழகப்பன் நன்றி உரை கூறினார். விழாவில் கோவிலூர் சனாதன தர்ம உலகப் பல்கலை அறநிலைக் கல்வி நிறுவனங்களின் முதல்வர்கள், பேராசிரியர்கள், ஆசிரியர்கள், அலுவலர்கள் திரளாகக் கலந்து கொண்டனர்.

28.5.2022 மாலையில் இலக்கியப் பூங்கா நிகழ்ச்சியில் முனைவர் அ. சங்கர்தாஸ் சிலப்பதிகாரம், வஞ்சிக் காண்டம் வரந்தருகாதை பற்றிச் சொற்பொழிவாற்றினார்.



**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்

– பதிப்பாசிரியர்








# கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக் மேல்நிலைப்பள்ளி

## கோவிலூர்

**2021 - 2022 ஆம் கல்வி ஆண்டு - பொதுத்தேர்வு முடிவுகள்**

- ★ மேல்நிலை முதலாம் ஆண்டு மற்றும் மேல்நிலை இரண்டாம் ஆண்டு பொதுத் தேர்வில் **100%** மாணவர்கள் தேர்ச்சி பெற்றுள்ளார்கள்.

- ★ அவர்களில் **500** மதிப்பெண்களுக்கு மேல் **25%** மாணவர்கள் பெற்றுள்ளார்கள்.

- ★ கணினி அறிவியல் பாடத்தில் **3** மாணவர்களும், கணக்குப் பதிவியல் பாடத்தில் ஒரு மாணவியும் **100 / 100** மதிப்பெண்கள் பெற்றுள்ளார்கள்.

- ★ பத்தாம் வகுப்புப் பொதுத்தேர்வில் **35%** மாணவர்கள் **400** மதிப்பெண்களுக்கு மேல் பெற்றுள்ளார்கள் என்பதை மிக்க மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

திருமதி. **மணிமொழி மோகன்**
முதல்வர்,
கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக் மேல்நிலைப் பள்ளி, கோவிலூர்

Thirumagal
04565 - 232991